KALKI 12.8.90 ரூ. 2.50

# கல்கி

அஞ்சலியாக
அசத்தும் ஷாமிலி!



தோழர்கள் தருவார்கள் சிறப்புஇடம் - உங்களுக்கே !





சாதாரண
சோப்புகள்
உடல்
வாடையை
தடுக்காது.
அது
உங்களுக்கு
தெரியும்.





புதிய
ஷீல்டின்
இன்டர்
நேஷனல்
டியோடரன்ட்
மட்டுமே
தீவிரமாக
உடல்
வாடையை
தடுக்கிறது.
தன்னம்
பிக்கை
புத்துணர்வு
தருகிறது. . .
மணிக்கு
மணி!



புதிய
Shield





LINTAS SH G 36 2416 TM

இன்டர்நேஷனல் டியோடரன்ட் உள்ளது.

தன்னம்பிக்கையின் புத்துணர்ச்சி !

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

# காட்டுத் தீவட்டிகள்



சென்னாரெட்டி அரசாங்கம் நக்ஸலைட்கள் விஷயத்தில் தடுமாறிக் கொண்டு, சட்ட ஒழுங்கைச் சீரழித்துக் கொண்டு இருப்பதாய்க் காங்கிரஸ் கட்சியினரே ராஜீவ் காந்தியிடம் புகார் செய்யும் செய்திகள் பலமுறை வந்து விட்டன. நக்ஸலைட்டுகள் தங்கள் கோரிக்கைகளுக்காக எம்.எல்.ஏ.க்கள், ஜில்லா பரிஷத் முக்யஸ்தர்களைக் கடத்திக் கொண்டு போவதும், விடுவிப்பதும் அவ்வப்போது வரும் செய்திகள். நாலைந்து மாவட்டங்களில் சட்டம், நீதித் துறைகள் தடுமாற, "இணை அரசாங்கங்களை" நக்ஸலைட்டுகள் நடத்துகிறார்கள் என்பதாகவும் கருதப்படுகிறது. இந்த நிலையில், இப்போது வெளியாகியுள்ள "அடவி தீவிட்டியலு" என்ற படம் காங்கிரஸாருக்கு மேலும் பயத்தைக் கிளப்பி விட, படத்தைத் தடை செய்ய சென்னாரெட்டி அரசு யோசித்து வருகிறது. இந்தக் கட்டுரை வெளியாவதற்கு முன்பே ஒருவேளை தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கலாம்!

"அடவி தீவிட்டியலு" என்றால் "காட்டுத் தீவட்டிகள்" என்று பொருள். இப் படம் பல அதிர்ச்சிகளைத் தந்துள்ளது.

"அடவி தீவட்டியலு" என்றால், "காட்டுத் தீவட்டிகள்" என்று பொருள். இப்படம் பல அதிர்ச்சிகளைத் தந்துள்ளது.

உள்துறை மந்திரி மகன் ஆதிவாசிப் பெண்ணைத் தன் இச்சைக்குப் பலியாக்கக் கல்யாணம் செய்து கொள்வதாகப் பாவித்துப் பின் விலக்குகிறான். இதனைக் காட்டிலாகா அதிகாரி எதிர்க்கிறார். அதனால் அந்த அதிகாரி, போலீஸால் பொய் வழக்கில், சிக்க வைக்கப்பட்டுச் சித்திரவதையாகிறார். தப்பி ஓடி நக்ஸலைட் ஆகிறார். மந்திரி மகனைத் தம் பட்டாளத்தோடு வந்து சுட்டுக் கொல்கிறார். போலீஸ் கிராம மக்களைச் சித்திரவதை செய்கிறது; சுட்டுக்கொல்கிறது; போலீஸ் சித்திரவதையில் செத்தவர்களை, 'போலீஸுடனான மோதலில் செத்தவர்கள்' என்று சொல்கிறது. தங்கள் இயக்கத்துக்காகக் கிராமத்தினர் தொடர்ந்து சாவது பிடிக்காத பெண் தோழியர் நக்ஸலைட் ஒருவர், காட்டிக் கொடுக்க, பல முக்கிய நக்ஸலைட்டுகள் இறக்கின்றனர். அதில் பிடிபடுகிறார் முன்னாள் காட்டிலாகா அதிகாரியான நக்ஸலைட்.

## மாதம் ஒரு தொகுதி

### தாரமங்கலம் தொகுதிக்கு வரப்போகிறோம்!

'மாதம் ஒரு தொகுதி' என்ற கல்கியின் திட்டத்தின் கீழ் நடந்த ஏழாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி, தாரமங்கலம் தொகுதி.

இத்தொகுதியில் நமக்கு அடுத்தபடியாக வாக்குகள் பெற்ற சுயேட்சை வேட்பாளர் பி. கந்தசாமியைவிட 1,653 வாக்குகள் அதிகம் பெற்று வென்றிருப்பவர் அ. இ. அ. தி. மு. க. வைச் சேர்ந்த கே. அர்ஜுனன்.

தம்மைத் தேர்ந்தெடுத்த தாரமங்கலம் தொகுதி மக்களுக்கு எம். எல். ஏ. என்கிற முறையில் கே. அர்ஜுனன் என்னென்ன செய்து கொண்டிருக்கிறார்? வாக்குறுதிகளை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறாரா, இல்லையா?

தாரமங்கலம் தொகுதியைச் சேர்ந்த அனைவரும் தங்கள் எம். எல். ஏ. வான கே. அர்ஜுனனிடம் கேட்க நினைக்கும் கேள்விகளை எங்களுக்கு எழுதியனுப்பலாம். அவர் செய்யும் வளர்ச்சிப் பணிகள் பற்றியும், கூடவே தொகுதி வளர்ச்சிக்கான உங்கள் ஆலோசனைகளையும் எழுதலாம்.

நீங்கள் எழுதும் ஒவ்வொரு விஷயத்தையும் எம். எல். ஏ. கவனத்திற்குக் கொண்டு வந்து அவருடன் விவாதிப்பதோடு, தொகுதியில் நாங்கள் நேரடியாக வந்து சுற்றிப் பார்த்தும் உண்மைகளை ஆராய்வோம்.

கடைசியாக எங்கள் அனுபவங்களையெல்லாம் ஒன்று சேர்த்து அக்டோபர் மாதக் கல்கியில் கட்டுரையாக வெளியிடுவோம்.

**தாரமங்கலம் தொகுதியிலுள்ள வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 31.8.90.**

உறையின் மேல், 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்



நக்ஸலைட்களை ஒடுக்கும் பணியில் ஈடுபடுத்தப்படும் ஐ. ஜி. யின் மகன்தான் அந்த நக்ஸலைட். அப்பாவே மகனை ஜெயிலில் தள்ளி, சித்திரவதைக்கு உள்ளாக்குகிறார். அவனை விடுதலை செய்ய வேண்டும் என்று நக்ஸலைட்டுகள் எம். எல். ஏ. வைக் கடத்திச் சென்று கோரிக்கை வைக்க, அது நிராகரிக்கப்பட, எம். எல். ஏ. கொல்லப்படுகிறார். உள்துறை மந்திரியையே கடத்திக் கொண்டு போகிறார்கள். போலீஸ் "அப்படியொரு நக்ஸலைட்டைக் கைது செய்யவேயில்லை" என்கிறது. முதன் மந்திரி தலையிட்டில் அந்த நக்ஸலைட் விடுவிக்கப்பட்டு, அவர்கள் குறிப்பிடும் இடத்திற்குக் கொண்டு போகப்படுகிறான். உள்துறை மந்திரி விடுவிக்கப்படும் தருணத்தில், தம் மகனைக் கொன்றவன் ஐ. ஜி. யின் மகனான அந்த நக்ஸலைட் என்பதை அறிந்தவர் அவனைச் சுட்டுக் கொல்ல, ஒப்பந்தம் மீறப்பட்டு, போலீஸ் — நக்ஸலைட்டுகளின் துப்பாக்கி மோதலில் நூற்றுக்கணக்கில் இருதரப்பிலும் உயிரிழக்கிறார்கள். போலீஸ் — நக்ஸலைட்களின் பிணங்களைக் குவித்துத் தீயிடும் ஐ. ஜி., உள்துறை மந்திரியையும் அந்தத் தீயில் தூக்கிப் போட்டுச் சாகடிக்கிறார்!

**ப**டம் முழுக்க வன்முறைக் காட்சிகள். நிலப் பிரபுக்களின் கொடுமைகள், அரசியல்வாதிகளின் கொடுமைகள், நக்ஸலைட்டுகளின் கொடுமைகள், போலீஸ் கொடுமைகள்... எல்லாம் ஒன்றோடு ஒன்று போட்டி போட்டுக் கொண்டு உச்சத்துக்குப் போகின்றன. ஒரு காட்சியில் அரசியல் லாபத்துக்காகப் போலீஸார் பலி ஆகிறார்கள் என்று ஒரு போலீஸ் கான்ஸ்டபிள் சொல்ல, உள்துறை மந்திரி அந்த போலீஸ்காரரை அறைகிறார். அவ்விடத்தில் உள்ள நூற்றுக்கணக்கான போலீஸ்காரர்கள் உள்துறை மந்திரியை மன்னிப்பு கேட்கச் சொல்லித் துப்பாக்கி நீட்டுகிறார்கள். ஐ. ஜி. தலையிட, மந்திரி தப்புகிறார். ஆனால் இறுதிக் காட்சியில் அதே ஐ. ஜி. உள்துறை மந்திரியைச் சக்கையாய் அடித்து, எரியும் பிணக் குவியலில் எறிகிறார்.

இப் படம் நக்ஸலைட்டுகளின் மேல் பல்வேறு வழிகளில் அனுதாபத்தை வெளிப்படுத்துகிறது. நம் அரசியல் கட்சிகளின் அவலட்சணங்கள் அதற்கு உதவுகின்றன.

இது மாதிரிப் படங்கள் தடைசெய்யப்பட வேண்டும் என்ற முணுமுணுப்பு எழுவது சகஜம். இம்முறை இந்த முணுமுணுப்பு சிலரிடமிருந்து சற்று உரக்கவே வெளிவந்துள்ளது. சென்னாரெட்டி ஆட்சியில் சட்டம் ஒழுங்கு சீர்குலைவுக்குச் சரியான அத்தாட்சி இப் படம் என்கிறார்கள் எதிர்க் கட்சியினர்.

— ஆர். பி. எஸ்.

# பத்து சதவிகிதம் வெட்டு

கருத்து: ஜூலி














# அஞ்சலியாக அசத்தும் ஷாமிலி!

**பார்த்தவுடன் தூக்கி வைத்துக் கொஞ்சத் தோன்றும் அழகு. எதைச் சொன்னாலும் சட்டென்று புரிந்து கொள்ளும் சுட்டித்தனம். இதுதான் இரண்டே வயது முடிந்த ஷாமிலி. அஞ்சலி படத்திற்கு இந்த ஷாமிலியை எப்படி அத்தனை கச்சிதமாகத் தேர்ந்தெடுத்து நடிக்க வைத்தார் மணிரத்னம்? அவரைச் சந்தித்தபோது...**

"**நா**ன் சினிமாத் துறையில் நுழைவதற்குப் பல வருடங்கள் முன்பு ஒரு நாள் மாலை, நண்பர் ஒருவர் வீட்டுக்குப் போயிருந்தேன். அவருக்கு மூன்று குழந்தைகள். முதல் இரண்டு பேரும் நார்மல். ஆனால் மூன்றாவது குழந்தைக்கு மன வளர்ச்சி குறைவு. பொதுவாக மன வளர்ச்சி குன்றிய குழந்தை வீட்டிலிருந்தால், வீட்டிற்கு நண்பர்களோ அல்லது உறவினர்களோ வரும் சமயத்தில் அந்தக் குழந்தையை, வந்திருக்கிறவர்கள் கண்களில் படாமல் பார்த்துக் கொள்வார்கள். அந்தக் குழந்தை, தவறிப் போய் அவர்கள் முன் வந்து தன்னை அறியாமல் ஏதாவது செய்யும் போது, தர்மசங்கடமாய் உணருவார்கள். ஆனால் அந்த நண்பர் வீட்டில், அப்படி எந்தவிதமான ஒளிவுமறைவோ, சங்கோஜமோ இன்றி, மன வளர்ச்சி குன்றிய குழந்தையையும் மற்ற குழந்தைகளைப் போலவே பாவித்தார்கள். தங்கள் முதல் இரண்டு குழந்தைகளைப் போலவே மூன்றாவதையும் எனக்கு அறிமுகப்படுத்தினார்கள். அதுவும் எங்களுடன் ஹாலில் உட்கார்ந்து கொண்டு இருந்தது. அவர்கள் வீட்டில் அந்தக் குழந்தையை வெகு சாதாரணமாய் நடத்தியது என்னுள் ஒரு பாதிப்பை ஏற்படுத்தியது. இதுதான் அஞ்சலி படத்தை எடுக்கத் தூண்டுதலாய் அமைந்த சம்பவம்."

"உங்களுள் ஒரு பாதிப்பை ஏற்படுத்திய இதுவல்லவா உங்கள் முதல் படமாக இருந்திருக்க வேண்டும்?"

"ஒன்று, வித்தியாசமான ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும்; இல்லையெனில், வழக்கமான ஒன்றாக இருந்தாலும் அதை வித்தியாசமான முறையில் சொல்ல வேண்டும் என நினைப்பவன் நான். அதன்படி பார்த்தால், அஞ்சலி முதல் பிரிவு. பல வருடங்களுக்கு முந்தைய இந்த அனுபவத்தையும் ஒரு சப்ஜெக்டாய் வைத்துப் படம் செய்யலாம் என்கிற எண்ணமே எனக்கு 'நாயகன்' படம் டப்பிங்கின் போதுதான் தோன்றியது. அதில் ஒரு சிக்கலும் இருந்தது. மனவளர்ச்சி குன்றிய குழந்தை என்பது கொஞ்சம் வறட்சியான சப்ஜெக்ட். எனவே அதை மையமாக வைத்துப் படமெடுத்தால் அதையே படம் முழுக்கச் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. எனவே அப்படிப்பட்ட ஒரு குழந்தையைப் பிரதான பாத்திரமாய் வைத்து, ஒரு கதையைத் தயார் செய்ய வேண்டியிருந்தது."

"அப்படியானால் ஓர் உருக்கமான, உன்னதமான சப்ஜெக்டை எண்டர்டெய்ன்மெண்ட் சேர்த்து, கமர்ஷியல் ஆக்கி விட்டீர்கள் என்ற குற்றச்சாட்டு எழுமே?"

"இதையே இன்னொரு விதமாகப் பாருங்கள். இந்தப் படத்தில் ஒரு மெஸ்ஸேஜ் இருப்பதாக ஒப்புக் கொண்டால், அந்தச் செய்தி, அதை ஏற்கெனவே அறிந்த உயர் மட்டத்தினரைச் சென்று அடைவதால் என்ன லாபம்? எல்லாத் தரப்பினரையும் அச் செய்தி சென்றடைய வேண்டும் என்றால், எல்லாரும் பார்த்து ரசிக்கும்படி படம் எடுத்தால்தானே அது சாத்தியமாகும்!"

"அஞ்சலி பாத்திரத்திற்கு ஷாமிலியைத் தேர்ந்தெடுத்தது எப்படி?"

"சுமார் இரண்டு வயதுக் குழந்தையை அஞ்சலியாக நடிக்க வைக்க வேண்டுமென்று முடிவு செய்தேன். இரண்டு வயதுக் குழந்தையை நடிக்க வைப்பதே சிரமம்தான். அதிலும் மன வளர்ச்சி குன்றிய குழந்தையாக நடிக்க வைக்க வேண்டுமென்றால் கேட்கவே வேண்டாம். எந்தக் குழந்தையைப் போடுவது என்று யோசித்துக் கொண்டிருக்

கையில்தான் பேபி ஷாலினி அனுப்பிய புத்தாண்டு வாழ்த்து அட்டையில், ஷாலினியும், ஷாமிலியும் இணைந்து இருக்கும் போட்டோ இருப்பது நினைவுக்கு வந்தது. அந்தப் படத்தை மறுபடி எடுத்துப் பார்த்ததும் எனது கதையின் பாத்திரத்திற்கு ஏற்ற குழந்தை ஷாமிலிதான் என முடிவு செய்தேன்.''

''மன வளர்ச்சி குன்றிய குழந்தையின் செய்கைகளை மனத்தைத் தொடும்படி காட்டியிருக்கிறீர்களே! அது எப்படிச் சாத்தியமாயிற்று?''

''ஸ்பாஸ்டிக் சொசைட்டிக்குச் சென்று மனவளர்ச்சி குன்றிய குழந்தைகளைப் பார்த்தேன். மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் பள்ளிக்கூடங்களுக்குச் சென்று கவனித்தேன். குறிப்பாக அண்ணா நகரில் டாக்டர் மாத்யூ என்பவர் நடத்தி வரும் 'ஆசீர்வாத்' என்ற மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் பள்ளியில் எனக்கு நிறைய விஷயங்கள் கிடைத்தன. அங்கே பல நாட்கள் சென்று மனவளர்ச்சி குன்றிய சின்னஞ்சிறு மழலைகளின் செய்கைகளைக் கவனித்தேன். அத்தகைய குழந்தைகளின் பெற்றோர்களிடமும் பேசி விவரங்கள் தெரிந்து கொண்டேன். மனிதன் என்கிற முறையில் என்னுள் பாதிப்பை ஏற்படுத்தியவற்றை, இயக்குநர் என்ற முறையில் படத்தில் காட்டியிருக்கிறேன்.''



**மனிதன் என்கிற முறையில் என்னுள் பாதிப்பை ஏற்படுத்திய வற்றை, இயக்குனர் என்ற முறையில் படத்தில் காட்டி யிருக் கிறேன்...**



''நீங்கள் எதிர்பார்த்த மாதிரியெல்லாம் குழந்தை ஷாமிலியை நடிக்க வைக்க முடிந்ததா?

''முதலில் நிறையச் சிரமப்பட்டேன். ஒரு சில சந்தர்ப்பங்களில் ஆழம் தெரியாமல் காலை விட்டு விட்டோமோ என்று கூடத் தோன்றியது. திடீரென்று, குழந்தை ஷாமிலியைத் தனியாக நடக்க விடாமல், சுவரில் தாங்கியபடி நடக்க வைத்தால் ரியலிஸ்டிக்காக இருக்கும் என்று தோன்றியது. அதைச் செயல்படுத்திய போது வேலை சுலபமாகியது. அதோடு மனவளர்ச்சி குன்றிய குழந்தைகள் பள்ளிக் கூடங்களுக்குச் சென்று அங்குள்ள குழந்தைகளின் செய்கைகளை விடியோ எடுத்துக் கொண்டு வந்தோம். அதைத் திரும்பத் திரும்ப ஷாமிலிக்குப் போட்டுக்காட்டிப் பயிற்சியளித்தேன். பிறகு, அந்த விடியோ படத்தில் ஒரு குறிப்பிட்ட குழந்தையை மட்டும் ஷாமிலிக்குச் சுட்டிக் காட்டி, 'எங்கே, அந்தக் குழந்தையைப் போல் சிரி! அவளைப் போல் நட! அவளைப் போல் அழு' என்ற போது ஷாமிலியும் அதே போல் செய்தாள். அவள் பாட்டுக்குத் தன்னிச்சையாய்ச் செயல்பட விட்டுப் படமெடுத்தேன். அப்படி ஏராளமாக எடுத்தவற்றில் தேவையானவற்றை மட்டும் படத்தில் பயன்படுத்திக் கொண்டேன்.''

''பார்ப்பவர் மனங்களைத் தொடும்படியாக இருக்க வேண்டும் என்பதற்காகத் தானே படத்தில் அஞ்சலி இறந்து போவது போல் கதையை அமைத்திருக்கிறீர்கள்?''

''படமெடுக்கும் போது முடிவு இப்படித்தான் இருக்க வேண்டும் எனத் தீர்மானம் ஏதும் செய்து கொள்ளவில்லை. கதையோட்டத்தின்படி, கிளைமாக்ஸ் இப்படித்தான் இருக்க வேண்டுமென்று தோன்றியதால், இப்படி அமைத்தேன். இந்த முடிவில் 'ரியலிஸம் இல்லை' என்று கூற முடியாது. சாதாரணக் குழந்தைகளை விட, மன வளர்ச்சி குன்றிய குழந்தைகளில் சிசு மரண சதவிதம் அதிகம் என்கிறது புள்ளி விவரம்.''

''அத்தனை குழந்தைகளையும் ஒன்று சேர்த்து வேலை வாங்க ரொம்பக் கஷ்டப் பட்டீர்களா?''

''ஆரம்பத்தில் குழந்தைகளைத் தேர்ந்தெடுப்பதில்தான் கஷ்டம் அதிகம். குழந்தைகள் பார்க்கவும் பளிச்சென்று இருக்க வேண்டும். அவர்களுக்கு நன்றாக நடனமாடவும் ஆர்வமிருக்க வேண்டும் என்பதால் முதலில் நிறையக் குழந்தைகளைப் பார்த்து, நடனப் பயிற்சி அளித்து, முடிவில் தான் தேர்வு செய்தேன். எனது எதிர்பார்ப்புக்கு மேலேயே ஒவ்வொரு குழந்தையும் அத்தனை ஈடுபாட்டுடன் நடித்தது.''

''அஞ்சலி என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தது எப்படி?''

''குறிப்பிட்ட காரணம் எதுவுமில்லை. என்றாலும் மனவளர்ச்சி குன்றிய பெண் குழந்தை அஞ்சலியின் கதையை, பெண் குழந்தைகள் ஆண்டில் படமெடுத்தது பொருத்தமாக அமைந்தது. அஞ்சலி செலுத்தியது போலவும் ஆயிற்று.''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

அட்டையிலுள்ள ஷாமிலி வண்ணப்படம்: **மோனாலிஸா**

மணிரத்னம் வண்ணப்படம்: **யோகா**


**HAS YOUR CHILD READ THE LATEST ISSUE OF**

# Gokulam

96 Pages for Just Rs. 3/-



* **Grandpa's Tales** — *a story told by grandpa.*
* **My Country, My People** — *read about the customs and habits of people from different regions.*
* **Babur** — *a play about the founder of the Mughal Dynasty.*

**Plus** *exciting stories, a game, Things to Make and Do, Puzzles, Jokes....*

**BUY YOUR CHILD A COPY TODAY!** **AUGUST ISSUE**

# என் தாத்தா— இந்த வயதிலும் என்ன துடிப்பு!

தாத்தாவுக்கு வயதாகிக் கொண்டே போகிறது. உடம்போட செயலாற்றல் குறைந்து கொண்டே வருகிறது. அவர் இப்போது குறைவாகச் சாப்பிடுகிறார்.

**அவர் தனது ஊட்டச்சத்துக்களை காம்ப்ளான் மூலம் நிறைவு செய்கிறார்.**

எளிதாக ஜீரணிக்கக்கூடிய காம்ப்ளான், உங்கள் உடலுக்குத் தேவையான 23 ஊட்டச் சத்துணவுகளைக் கொண்டதாகும். தேய்ந்த உடல் திசுக்களைப் புதுப்பிப்பதற்கான பால் புரதம், சக்தி பெறுவதற்கான கார்போஹைட்ரேட்டுகள் மற்றும் கொழுப்புச் சத்து, உடல் நலத்திற்கான வைட்டமின் மற்றும் தாதுக்கள் ஆகியவற்றை கொண்டதாகும் காம்ப்ளான்.




**23**

மூலாதார சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்க்கத் தேவையில்லை.

**காம்ப்ளான்®**

திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/47/213/TMI

தொன்னூல் கண்டு தடுமாறாப் பதிப்பகம், வர்த்தமானன் பதிப்பகம்!

# 40%சலுகை! இன்னும் 1000 பேருக்கு மட்டுமே

## 'செட்'டாகத் தர இயலும். எனவே முந்துக!

### தொடர்ந்து நெடு நாள் இந்த சலுகை தர முடியாது.

நூற்றுக்கணக்கான பட்டி மன்றங்களைப் பார்த்திருப்பீர்களே, எந்த ஒரு நூலையாவது முழுமையாக அறிந்ததுண்டா?.... இல்லை.'

ஏராளமான இலக்கியச் சொற்பொழிவுகளைச் செவிமடுத்திருப்பீர்களே, எந்த ஓர் இலக்கியத்தையாவது முழுமையாகப் புரிந்து கொண்டதுண்டா?... இல்லை! இல்லை!

எண்ணற்ற புராணப் பிரசங்கங்களைக் கேட்டிருப்பீர்களே, ஏதேனும் ஒரு புராணத்தையாவது முழுமையாக அறிந்ததுண்டா?.... இல்லை! இல்லை! இல்லவே இல்லை!

அப்படியானால் பேரிலக்கியங்களைப் புரிந்து கொள்ள என்னதான் வழி?

எங்கள் வெளியீடுகளான தெளிவுரை நூல்கள் ஒன்றுதான் வழி! பல நூறு பட்டிமன்றங்கள் - பல நூறு புராணப் பிரசங்கங்கள் பல நூறு இலக்கியச் சொற்பொழிவுகள் சாதிக்காத சாதனையை எங்கள் தெளிவுரை நூல்கள் சாதிக்கின்றன!

### எப்படி?

**ஒரு பக்கம் மூலப்பாடல்கள் - எதிர்ப்பக்கம் உரைகள் என்னும் முறையில் அமைந்த எமது பேரிலக்கிய வெளியீடுகளைச் சில நாட்களில் முழுமையாகப் படித்துப் புரிந்து கொள்ளலாம். ஒரு நாவல் படிப்பது போல வலப்பக்க உரையைப் படித்துக் கொண்டே போகலாம்!**

என்னிடம் 'அந்தப் பதிப்பு இருக்கிறது, இந்தப் பதிப்பு இருக்கிறது' என்னும் வீம்புப் பேச்சால் - போலிக் கௌரவத்தால் என்ன பயன்? வெறும் மூல நூல்களால் கடுகளவு பயனும் இல்லை காண்! எனவே உரையுடன் கூடிய எங்கள் வெளியீடுகளை வாங்கிப் பயனடைய வேண்டுகிறோம்.

| நூல்பெயர் | | விலை | சலுகை விலை |
|---|---|---|---|
| ★ கம்பராமாயணம் | 9 தொகுதிகள் | ரூ 450 | ரூ 270.00 |
| ★ கந்தபுராணம் | 10 தொகுதிகள் | ரூ 460 | ரூ 276.00 |
| ★ வில்லிபாரதம் | 6 தொகுதிகள் | ரூ 230 | ரூ 138.00 |
| ★ சீவக சிந்தாமணி | 5 தொகுதிகள் | ரூ 122 | ரூ 73.00 |
| ★ உத்தரகாண்டம் | 2 தொகுதிகள் | ரூ 80 | ரூ 48.00 |
| ★ சிலப்பதிகாரம் | 3 தொகுதிகள் | ரூ 42 | ரூ 25.00 |
| ★ நாலடியார் | ................ | ரூ 22 | ரூ 13.00 |
| ★ திருக்குறள் | ................ | ரூ 25 | ரூ 15.00 |
| ★ திருவாய்மொழி | முதல்தொகுதி | ரூ 30 | ரூ 18.00 |
| ★ தண்டியலங்காரம் | ................ | ரூ 30 | ரூ 18.00 |

சலுகை விலையை M.O. or D.D. மூலம் அனுப்புக. புத்தகங்களை V.P.Pயில் அனுப்புகிறோம். V.P.P செலவைத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக. பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

**Varthamanan Pathippagam,**
ARR Complex,
141, Usman Road, T. Nagar, Madras-17.
(பனகல்பார்க் அருகில்)

---

(அச்சில்: புறநானூறு, பத்துப்பாட்டு, பெரியபுராணம், திருவிளையாடல்புராணம், மணிமேகலை, தேம்பாவணி, சீறாப்புராணம் முதலியன)

ADSERVE

# ஒச்சாயிக் கிழவிகளும் வம்பு தவிர்க்க ஒரு யோசனையும்!



* கிழவி ரோலில் ஸி. டி. ராஜகாந்தம்.

"என்னப்பா சுப்பு ராஜா... எப்படி இருக்கே? நாம யூனிட் மாறினதிலேர்ந்து பார்த்துக்கக் கூட முடியலே..."

"ஏதோ இருக்கேண்ணே...!"

"என்னப்பா அலுத்துக்கறே?"

"பின்ன என்னண்ணே...? எத்தனை வருஷத்துக்குத்தான் இப்படி ஸ்டூடியோவுல லைட் பாயாவே இருக்கிறது...? அலுத்துப் போச்சண்ணே..."

"இதுக்குத்தானா இத்தனை அலுப்பு! சர்தான் போ! ஸி. டி. ராஜகாந்தம்னு கேள்விப்பட்டிருக்கியா?"

"அவங்க பழைய நடிகையாச்சே... இப்போ வயசு ரொம்ப ஆயிருக்குமே...?"

"எண்பத்தஞ்சு வயசு. சொன்னா நம்ப மாட்டே... அந்தக் காலத்து நகைச்சுவை நடிகர் சாரங்கபாணியோட நடிக்க ஆரம்பிச்சு... எம். ஜி. ஆர்., சிவாஜி படங்கன்னு தொடர்ந்து... இப்போ ரிலீசான நிலாப் பெண்ணே வரைக்கும் நடிச்சுக்கிட்டேதான் இருக்காங்க. இந்த வயசுலயும் காடு, மலைன்னு அவுட்டோர் ஷூட்டிங்குக்கும் வர்றாங்க... தெரியுமா?"

"அது சரிண்ணே... எனக்கொரு டவுட்டு. இப்பவெல்லாம் ஒச்சாயிக் கிழவி, மந்திரக் கிழவி, பாட்டுக்காரக் கிழவி, கூனியக் கிழவின்னு ஒவ்வொரு படத்திலேயும் ஒவ்வொரு கிழவி காரெக்டரைப் புகுத்திடறாங்களே... எதுக்கண்ணே?"

"ஒரு செண்டிமெண்ட்தான். ஒண்ணு சிலுக்கு, அனுராதா, டிஸ்கோ சாந்தின்னு... ஏதாவதொரு கவர்ச்சி டான்ஸ் இருக்கணும். இல்லைன்னா ஒரு கிழவி காரெக்டராவது இருக்கணும். அப்பத்தான் படம் நல்லா ஓடும்னு நினைக்கிறாங்க போல!"

"என்னா செண்டிமெண்டோ!"

"ஆமாப்பா. இல்லேன்னா வயசான கிழவி காரெக்டரில் நடிக்கிறதுக்கு வடிவுக்கரசியம்மாள்ளாம வந்திருப்பாங்களா? இப்போ ஸ்ரீவித்யா அம்மா கூட அப்படி நடிக்கத் தயாரா இருக்கிற மாதிரி தெரியுதே... சும்மாவா?"

"ஸ்ரீவித்யா அம்மா கூடவாண்ணே...?"

"கேளடி கண்மணி பார்க்கலே... அதுசரி, நமக்கெதுக்கப்பா பெரிய எடத்து வம்பெல்லாம்? அது பத்தியெல்லாம் நாம வாயே திறக்காம இருக்கிறதுதான் நல்லது..."

"வாய் திறக்கப்படாதுன்னு சொன்னதும் எனக்கு ஒண்ணு ஞாபகம் வருதண்ணே... எங்க யூனிட்ல வாணி விஸ்வநாத்னு ஓர் அம்மா. மத்தவங்க மாதிரி பிரேக் டைம்ல பத்திரிகைக்குப் பேட்டி தர்றது, அரட்டையடிக்கிறதுங்கிற பேச்சே கிடையாது. டேக் முடிஞ்சு, ரெஸ்ட் கிடைச்சா, நாலு பேரைக் கூட்டிக்கிட்டுச் சீட்டு விளையாட ஆரம்பிச்சுடுவாங்க. அதுல பொழுதும் போகும். அனாவசிய வம்புப் பேச்சும் வராது பாருங்க..."

"நல்ல ஐடியாதான். ஆனா அவுங்க தமிழ்ல சான்ஸ் இல்லாம இருந்தாங்க

* வம்பு தவிர்க்கும் வாணி விஸ்வநாத்.





* கருத்துள்ள படம்: ராஜா சந்திரசேகர்.



அடுத்த இதழில்...

● ஜனதா தளத்தில் உட்கட்சிப் பூசல்கள்
— எஸ். ஆர். பொம்மை
சிறப்புப் பேட்டி

போல...?''

''அதுக்கென்ன இப்போ...? தமிழ்ல கெடைக்காட்டியும் தெலுங்கில சக்கைப் போடு போடறாங்களே... அதைப் பார்த்து இப்போ தமிழ்ல நடிக்கவும் கூப்பிட றாங்க... அந்தம்மாவுக்குத்தான் கால்ஷீட் கொடுக்க முடியாம இருக்கு... தெரியுமில்ல...?''

''சரிப்பா... ரெண்டு நாளா விடாம ஷூட்டிங். ஒடம்பெல்லாம் ஒரே வலி. போய் ஒரு இருநூறு மில்லியாச்சும் அடிச்சாத்தான் தேவலை. நான் வரட்டுமா?''

''ஐயய்யோ... இந்தக் குடியை முதல்ல விடுங்கண்ணே... பேச்சு வந்ததாலே சொல்றேன், 'டிரங்கன் டிரைவ்'னு ஒரு டாகுமெண்டரிப் படம். குடிச்சுட்டுக் காரோட்டக் கூடாதுங்கிற கருத்தை மையமா வெச்சு எடுத்த படம். டீ. வி. யில கூடப் போட்டாங்களே... பார்க்கலை?''

''பார்த்தேம்பா... பாரதிராஜாகிட்டே உதவி டைரக்டரா இருந்த ராஜா சந்திரசேகர் எடுத்த படம்ல அது...!''

''ஆமா. அதை எடுக்கிறதுக்காக அந்தத் தம்பி பிரபல நடிகர்கள் கிட்டல்லாம் போய்க் கேட்டுச்சாம். அதுலல்லாம் நடிச்சா ஜனங்க ஒத்துக்க மாட்டாங்கன்னு அத்தனை பேரும் மறுத்துட்டாங்களாம். கடைசில கிரிக்கெட் ஆட்டக்காரர் ஸ்ரீகாந்த்தான் அதுல நடிக்க ஒத்துக்கிட்டாராம். இப்போ அந்தத் தம்பி 'புதிய நதிகள்'னு ஒரு சினிமா எடுக்கத் தொடங்கியிருக்கு...''

''அப்படியா...! 'ட்ரங்கன் டிரைவ்' மாதிரி நல்ல கருத்துள்ள படமா எடுத்தாச் சரி...''

''வரட்டுமா?''

''எங்கண்ணே...?''

''அட நீ வேறே... நேரா வீட்டுக்குத் தாம்பா போறேன்... பயப்படாதே!''

— எஸ். பாலு

## தானம்; அதிலும் நிதானம்!

அல்லாஹ்வுடைய வழியில் தங்கள் பொருள்களைச் செலவழிப்போரின் செலவுக்கு உவமானம், ஒரு தானிய விதையைப் பயிரிடுவது. அதிலிருந்து ஏழு கதிர்கள் முளைக்கின்றன. ஒவ்வொரு கதிரும் நூறு தானிய மணிகளைக் கொண்டுள்ளது. இவ்வாறு அல்லாஹ் நற்செயல்களின் பலன்களைப் பன்மடங் காக்குகிறான். எவர்கள் அல்லாஹ்வுடைய வழியில் தங்கள் பொருள்களைச் செலவு செய்த பின்னர், அதைத் தொடர்ந்து தாங்கள் செலவு செய்ததைச் சுட்டிக்காட்டிப் பேசாமலும், மனம் புண்படச் செய்யாமலும் இருக்கிறார்களோ, அவர்களுக்கு உரிய நற்கூலி அவர்களின் அதிபதியிடம் இருக்கிறது. கனிவான சொல்லும், மன்னித்து விடுவதும் மனம் புண்படச் செய்யும் தானத்தை விடச் சிறப்புடையனவாகும்.

— திருக் குர்ஆன்.

வெளியீடு: இஸ்லாமிய நிறுவனம் டிரஸ்ட், 78, பெரம்பூர் நெடுஞ்சாலை, சென்னை — 12. ஹதியா: ரூ. 60/—.

# சொல்கிறார்கள்...

எழில் மிகு கொன்கைக் கொடியாக நிற்கிறாள் சிவகாமி. நடனக் கலை அரசியாகவும் மாமல்லரின் காதலியாகவும் மட்டுமின்றி, அநீதிக்கு எதிராகச் சீறி எழும் கனலாகவும் அவளைப் படைத்துள்ளார் அமரர் கல்கி. சிவகாமியின் சபதத்தைப் படிக்கப் படிக்கப் புதிய சுவைகள் தோன்றும்.

— பத்மா சுப்பிரமணியம்.





சிவகாமியின் சபதம் படித்த போது நான் அடைந்த சந்தோஷத்தைப் போல் வேறு எந்த சரித்திர நாவல் படித்த போதும் அடைந்ததில்லை. ராஜ தந்திரம், வீரம், காதல், இவற்றோடு இறையுணர்வை இயல்பாக இணைத்து, நாவலை மட்டுமின்றி, அதனைப் படிப்போரின் உள்ளங்களையும் உன்னத நிலைக்கு உயர்த்தி விடுகிறார் கல்கி.

— தொழிலதிபர் பொள்ளாச்சி நா. மகாலிங்கம்.

சிவகாமியின் சபதத்தில் என்னை மிகவும் கவர்ந்தது கல்கியின் அரசியல் சாணக்கியம்! மகேந்திரர், நாகநந்தி ஆகியோரின் ராஜ தந்திரத் தாக்குதல்களையும் எதிர் தாக்குதல்களையும் எத்தனை திறம் படக் கையாண்டிருக்கிறார் அந்த மேதை! படிக்கும் போது, இன்றைய அரசியலை எழுதக் கல்கி இல்லையே என்ற ஏக்கமே எழுகிறது!

— இயக்குனர் கே. பாலசந்தர்.



சிவகாமியின் சபதம் முன்பு கல்கியில் பிரசுரமான போது படிக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. சிற்பக் கலைக்கும் ஓவியக் கலைக்கும் முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்ட நாவல் என்று அறிகிறேன். தமிழ் நாடு அரசு, கலைத் தொழில் கல்லூரி முதல்வர் என்ற முறையில் அதன் முக்கியத்துவத்தை உணர்ந்து, இம்முறை ஆவலோடு படிக்கக் காத்திருக்கும் பல்லாயிரக் கணக்கான வாசகர்களோடு நானும் சேர்ந்து கொள்கிறேன்.

— சி. ஜெ. அந்தோணி தாஸ்.



கல்கி

1990 ஆகஸ்ட் 12
மலர் : 49 இதழ் 2
பிரமோதூத ஆடி 27



## அக்கிரமத்துக்கு அடிபணியாத வி. பி. சிங்!

சமரசமாகப் போவது நல்லதுதான். ஜனநாயகத்தில் பல சந்தர்ப்பங்களில் விட்டுக் கொடுக்கத்தான் வேண்டியிருக்கும். நம்முடைய நிலை தவறானது என்று தெரிந்த பிறகு மனம் திறந்து அதை ஒப்புக் கொண்டு கருத்தை மாற்றிக் கொள்ளத் துணிவு வேண்டும். சில சமயம் நமது நிலை சரியானது என்ற திடமான நம்பிக்கை இருந்த போதிலும் கூட விட்டுக் கொடுக்க நேரும். இதற்கு அசாதாரண மனோதைரியம் தேவை. நமது ஆட்சேபணையை மட்டும் பதிவு செய்துவிட்டு அத்துடன் விட்டு விடலாம். ஆனால் இதற்கெல்லாம் ஓர் எல்லை உண்டு. தன்மானத்தை இழந்து யாரும் இன்னொருவருக்கு விட்டுக் கொடுக்க முடியாது; சமரசமாகப் போக இயலாது. அதர்மத்துக்கு அடிபணியக் கூடாது. அத்தகைய ஒரு நிலை இன்று மத்திய அமைச்சரவையில் தோன்றி விட்டது. அங்கே இனி சமரசத்துக்கு இடமில்லை. அதற்கு முயற்சி செய்வது வீண் என்பது மட்டுமல்ல; தவறும் கூட. தப்பித் தவறிச் சமரசம் ஏற்பட்டாலும் அது தாற்காலிகமாகவே இருக்கும். நன்மையை விடத் தீமையே அதிகம் விளையும்.

அருண் நேரு, ஆரீஃப் முகமதுகான் மீது அவதூறுகளைச் சுமத்திப் பிரதமருக்கு ஒரு கடிதம் எழுதினார் தேவிலால். அதில் பாஸ்பாரிக் ஆஸிட் ஊழல், ரூ. 55 லட்சம் நிலம் வாங்கிய ஊழல் என்று பயங்கரமான லஞ்ச ஊழல் குற்றச்சாட்டுக்கள் உள்ளன. ''குற்றச்சாட்டுக்களுக்கு ஆதாரம் இருந்தால் சொல்லுங்கள்'' என்று கேட்டிருக்கிறார் பிரதமர். அதற்குப் பதில் கூற முடியாத தேவிலால், பிரதமர் ருஷ்யா கிளம்பும் சமயம் அவருக்கு இன்னொரு கடிதம் எழுதினார். அத்துடன் ஒரு கடிதத்தை இணைத்திருந்தார், 'இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?' என்று கேட்பது போல. அப்படி இணைக்கப்பட்டிருந்த கடிதம் வி. பி. சிங், குடியரசுத் தலைவருக்கு எழுதியது! போஃபோர்ஸ் ஊழலில் அருண் நேருவைச் சம்பந்தப்படுத்தி, குற்றம் சாட்டியது அந்தக் கடிதம்! அந்தக் கடிதம் ஒரு மோசடி — ஃபோர்ஜரி — என்பது தெரிய வந்துள்ளது.

''அது ஃபோர்ஜரி என்பதாக எனக்குத் தெரியாது; எனக்குக் கிடைத்த ஒரு கடிதத்தைப் பிரதமரின் பார்வைக்கு அனுப்பி வைத்தேன், அவ்வளவுதான்'' என்கிறார் தேவிலால், இப்போது. அவர் வாதத்தை அப்படியே ஏற்பதானாலும், சகமந்திரி மீது ஊழல் குற்றச்சாட்டு சுமத்தும் ஒரு கடிதம் — அதுவும் இன்றைய பிரதமரே எழுதிய கடிதம் — தமக்குக் கிடைத்ததும் அது அசலா, மோசடியா என்று யோசிக்காமல் செயல்பட்டது துணைப்பிரதமரின் குற்றமே. அப்படி யோசிக்காதவர் துணைப் பிரதமர் பதவியை வகிக்கவே தகுதியற்றவராகிறார். மேலும், பிரதமருக்கு எழுதிய தமது முதல் கடிதத்தில் தேவிலால் குறிப்பிட்டிருந்தவையும் ஆதாரமற்ற, அபாண்டமான குற்றச்சாட்டுக்கள் என்பதாக நிரூபணமாகி விட்டது. எனவே, நன்கு ஆராயாமல் அள்ளித் தெளித்த அவசரக்



கோலமாகத் துணைப் பிரதமர் செயல்படுகிறார்; அல்லது, உள்நோக்கோடும் துவேஷத்தோடும் குற்றங்களைச் சுமத்துகிறார் என்பது தெரிய வருகிறது. இது ஒரு துணைப் பிரதமருக்கு அழகல்ல என்பதுடன், இத்தகைய போக்கு ஆபத்தானது; தேசத்தையே ஒரு சந்தர்ப்பத்தில் பேராபத்தில் சிக்க வைத்துவிடக் கூடிய அணுகுமுறை.

போதாக்குறைக்கு இல்லஸ்டிரேட்டட் வீக்லி பேட்டியில் வேறு, சக அமைச்சர்களை மட்டுமின்றி, பிரதமரையே ஏசியிருக்கிறார் தேவிலால். பிரதமரை, 'முதுகெலும்பு அற்றவர்' என்று துணைப்பிரதமர் வர்ணித்திருக்கிறார். இப்போது, 'அந்த வார்த்தைக்கு எனக்கு அர்த்தமே தெரியாது' என்கிறார். துணைப் பிரதமர் நடந்து கொள்ளும் விதமா, இது? இந்த எலக்ட்ரானிக் யுகத்தில் ஒருவர் கூறாததைப் பொறுப்புள்ள ஒரு பத்திரிகை எழுதிவிட முடியாது. அப்படி எழுதினால் அதை வெகு எளிதாக நிரூபித்து விடலாம். எனவே இந்தச் சம்பவத்திலும் மிகக் கேவலமாக நடந்து கொண்டிருக்கிறார் தேவிலால்.

இதையெல்லாம் உத்தேசித்து, தேவிலாலை டிஸ்மிஸ் செய்வது தவிர, பிரதமருக்கு வேறு வழியிருக்கவில்லை. அருண் நேருவும், ஆரீஃப் முகமது கானும் விட்டுக் கொடுக்காமல் உறுதியாக இருந்தது இதற்கு உதவியுள்ளது.

பிரதமர் அஞ்ச வேண்டாம். தேவிலாலுக்கு அதிகாரம் இல்லை என்று தெரிந்தால், அவர் ஆதரவாளர்கள் நாளடைவில் பிரதமருக்குச் சலாம் போடுவார்கள். அப்படியே நடக்கவில்லையென்றாலும் பி. ஜே. பி. மற்றும் இடதுசாரி ஆதரவாளரை அமைச்சரவையில் சேர்த்துக் கொண்டு, உண்மையான தேசிய அரசை அமைக்கலாம். இதுவும் நடக்காமல், ஆட்சியே கவிழ்ந்து மறு தேர்தல் நடந்தாலும் பாதகமில்லை. அக்கிரமத்துக்கு அடிபணியவில்லை என்ற நற்பெயர் வி. பி. சிங்குக்கு நிச்சயம் உண்டு.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




## வட்டமேஜை

* தேவிலால் — சௌடாலா தம்பதியின் கோணல் புத்தியை 'குள்ளநரிகளின் கும்மாளம்!' தலையங்கத்தில் மிகச் சரியாகவே சுட்டிக் காட்டியிருக்கிறீர்கள். ''அதர்மத்தைப் பொறுத்துக்கொண்டு போக வேண்டிய தருணமும் உண்டு; எதிர்த்து நிற்க வேண்டிய சமயமும் உண்டு. பாரதம் உணர்த்தும் இந்த உண்மையை அறியாதவர் அல்ல என்பதைப் பிரதமர், குள்ளநரிகளுக்குக் கோடிட்டுக் காட்டட்டும்!'' என்ற வரிகளைப் படிக்கும்போது வி.பி. சிங் என்ற அர்ச்சுனனைப் பார்த்து, கல்கி என்ற கண்ணன், எழுச்சிக் கீதோபதேசம் அருளுவது போலவே உணர்ந்தேன்.

திருக்குவளை. கவிஞர். வெற்றிப் பேரொளி.




* திருநாவுக்கரசு பேட்டி படித்தேன். இப்படி அ.இ.அ.தி.மு.க.வினர் தங்கள் கட்சியிலிருந்து பிரிவதும், தங்கள் பக்க நியாயங்களைப் பெரிதாகப் பேசுவதும், மீண்டும் 'தலைவியே சரணம்' என்று துதிபாடித் திரிவதும் மக்களுக்குச் சலித்துப் போய் விட்டது!

நெல்லிக்குப்பம்.
ரா. ஜோதிராமன்.

* அரசியல்வாதிகளின் கேலிக் கூத்தை நகைச்சுவையுடன் படம் பிடித்துக் காட்டும் கார்ட்டூன்கள் ஒவ்வொன்றும் அருமை. மற்ற ஜோக்குகளை விட இதுவே தலை சிறந்த ஜோக்குகளாக அமைந்து விடுகின்றன.

கொங்கணாபுரம். வே. செந்தில் குமார்.

* சுஹாசினியின் பேட்டி படித்தேன். பெண்ணுக்காக, அந்தப் பெண் (சுஹாசினி) பட்ட சிரத்தைகள், அனுபவங்கள், கிடைத்த பாராட்டுக்கள் இவற்றையெல்லாம் மிகைப்படுத்தாமல் சொல்லியிருந்த விதத்தில் என் மதிப்பில் மேலும் உயர்ந்து விட்டார் அவர்!

சென்னை — 51. வா. வசந்தி.

* 'தமிழினியன்' எழுதிய 'போன வருஷத்தோடு போச்சு' சிறுகதை வரதட்சணை கேட்பவர்களுக்கு ஒரு சவுக்கடியாக அமைந்திருந்தது. இதுபோன்ற கதைகளைப் படித்தாவது பிள்ளைகளைப் பெற்றவர்கள் திருந்த மாட்டார்களா?

தஞ்சாவூர். கே. லக்ஷ்மி.

* கல்கி 29.7.90 இதழில் ''சென்சார் கெடுபிடி வலுக்கிறது'' என்ற தலைப்பில் எஸ். பாலு பின்வருமாறு எழுதியுள்ளார்: ''ஆபாவாணனின் 'இணைந்த கைகள்' சென்சாரின் பிடியில் சிக்கிக் கொண்டு சிதைக்கப்பட்டது.'' இக்கூற்று உண்மைக்கு முற்றும் முரணானது. 'இணைந்த கைகள்' 25.7.90 அன்றுதான் தணிக்கையானது. அத்தணிக்கைக் குழுவில் நானும் ஓர் உறுப்பினராக இருந்தேன். ஒரு சிறந்த படைப்பான அத்திரைப்படத்திற்கு வெட்டு எதுவுமேயின்றி (Clear) 'U' சான்றிதழ் அளிக்கப்பட்டது.

சென்னை — 17. பொன் பரமகுரு.

(''மோதிரக் கையால் குட்டுப்பட்டேன்; இனி முன்னெப்போதையும்விட எச்சரிக்கையாக எழுதுவேன்'' என்கிறார் நிருபர் பாலு. — ஆர்.)

* கௌஷிகனின் 'ஓ. நந்தலாலா!' தமிழினியனின் 'போன வருஷத்தோட போச்சு!' இரண்டே சிறுகதைகள்தான் என்றாலும் இரண்டும் அருமை!

சென்னை — 52.
எஸ். யோகலிங்கம்.

* 'ஓ. நந்தலாலா' — கதையில் நித்யா மஞ்சள் நிறப் புடவை உடுத்தியிருப்பதாகக் கதாசிரியர் எழுதியுள்ளார். ஆனால் படத்தில் மெனக்கெட்டு நீல நிறப் புடவை அணிவித்துள்ளீரே...

குத்தாலம். எஸ். ராஜா.

* 'அஞ்சலி' படத்திற்குச் சின்னதாக இருந்தாலும் நறுக்கென்று விமர்சனம் எழுதி அசத்தி விட்டீர்கள்.

ஈரோடு. ரேவதி ப்ரியன்.

* 'அஞ்சலி' படத்தைக் காதில் பஞ்சு வைத்துக் கொண்டு பார்த்தீரா? அப் படத்திற்குத் தனித் தன்மையோடு இசையமைத்த இளையராஜாவைப் பாராட்டினால் குறைந்தா போய் விடுவீர்?

சின்னமனூர். புரீதர்.

* பார்த்தவுடன் நாக்கில் நீர் ஊற வைக்கும் ஐஸ்கிரீம் பற்றிய சுவையான கட்டுரையை வழங்கியதோடு, வீட்டிலேயே ஐஸ்கிரீம் செய்யவும் சொல்லிக் கொடுத்து விட்டீரே. நன்றி!

தஞ்சாவூர்— 1. ஆர். ராமசந்தர்.

* எது நல்ல ஐஸ்கிரீம், மட்டமானது எது? எப்படித் தரம் பார்க்க வேண்டும், நல்ல தயாரிப்பு முறை எது என்றெல்லாம் விவரமாக எழுதப்பட்டிருந்த ஐஸ்கிரீம் பற்றிய கட்டுரை உண்மையில் ஐஸ்கிரீம் பிரியர்களுக்கு ஒரு 'கைடு லைன்' தான்.

தி.நகர். எம். பி. புவனேஸ்வரி.

* தப்புன்னாத் தப்பு! இல்லேன்னா இல்லே! உமது தைரியமே தைரியம்! யப்பா! அசந்து விட்டேன்! தேன்மொழி கல்யாண சுந்தரத்தின் கேள்விக்கான பதிலைத்தான் சொல்கிறேன். உண்மையில் நீர் நக்கீரனின் வம்சமே!

கோவை.
பாப்பம்பட்டி புலைபந்தமிழன்.

* மேட்டுப்பாளையம் வாசகி, மு. தேன்மொழி கல்யாண சுந்தரத்தின் கேள்வியொன்றுக்குப் பதிலளிக்கும் போது, 'அட, சர்தான் சார்...' என்று, தராசு பதிலளிக்கிறாரே... பெண்களை 'மேடம்' என்றுதானே சொல்ல வேண்டும்!

சிறுமுகை. நீ. கஜேசன்.

# கிட்டப்பார்வை ஆபரேஷனில் குணமாகுமா?

● கல்வி: எலும்பு, ரத்தநாளம் போன்றவை செயற்கையாகத் தயாரிக்கப்பட்டு உடலுக்குள் பொருத்தப்படுகின்றன. இவை உடலால் நிராகரிக்கப்படுவதில்லை. ஆனால் தானம் தரப்பட்ட இயற்கையான சிறுநீரகம், இருதயம் போன்ற உறுப்புக்களை உடல் நிராகரிக்கிற அபாயம் அதிகமாக உள்ளது. ஏன்?

டாக்டர் செல்வராஜ்: நமது உடலுக்குத் தற்காப்புச் சக்தி மிகவும் அதிகம். நோய்க் கிருமிகள் உள்ளே புகுந்தால் அவை அந்நிய உயிரணுக்கள் என்று புரிந்து கொண்டு அவற்றை அழித்து வெளியேற்றப் போராடுகிறது. இந்த அத்தியாவசியமான தன்மை தான் வேறு ஒருவரது உடலிலிருந்து ஓர் உறுப்பு நம் உடலில் பொருத்தப்படும் போதும் செயல்படுகிறது. உடலானது உடனே இது அந்நிய விஷயம், இதைத் தாக்க வேண்டும், தள்ள வேண்டும் என்று செயல்பட ஆரம்பிக்கிறது. எப்படி எனில், நமது உடலும் புரதம், தானமாக வந்து சேருகிற உறுப்பும் புரதம். ஆனால் ஒரு புரதத்துக்கும் மற்றொரு புரதத்துக்கும் உயிர்ம அணுக்களில் வேறுபாடு உண்டு. இதனால் ஒன்றுக்கொன்று வேறுபாடுகளை உணர்ந்து எதிர்ப்புச் சக்தி தோன்றுகிறது. எனவேதான் தானம் தரப்பட்ட உறுப்பைப் பொருத்து முன் 'டிஷ்யு கல்சர்' என்ற நிகைகளின் பொருத்தம் பார்க்கிறார்கள். அப்படியும் கூட சில சமயம் எதிர்ப்புச் சக்தி தோன்றும், நிராகரிப்பு இருக்கலாம். எனவே நிராகரிப்புத் தன்மையை மட்டுப்படுத்த மருந்தும் கொடுக்கிறார்கள். ஆனால் செயற்கையான உறுப்புக்கள் விஷயம் இப்படியல்ல. செயற்கை எலும்போ, மூட்டோ, அல்லது ரத்த நாளமோ புரதச் சத்தால் ஆனதல்ல. பரிசுத்தமான எஃகு, அடர்த்தி மிக்க பாலிஎதிலீன், டெஃப்லான், டைட்டானியம் போன்ற உலோக அல்லது பிளாஸ்டிக் கலவைகளால் ஆனவை. எனவேதான் தானமாகத் தரப்பட்ட உயிரோட்டமுள்ள இயற்கை உறுப்பு மாற்றத்தில் ஏற்படும் இக எதிர்ப்புத் தன்மை செயற்கை உறுப்பு மாற்றத்தில் உருவாவதில்லை.

● "குறைந்த இரத்த அழுத்தம், அதிக இரத்த அழுத்தம் இரண்டுக்கும் என்ன வேறுபாடு? விளக்குங்களேன்...

— ஜி. மகாலிங்கம், சென்னை — 20.

இதய சிகிச்சை நிபுணர் டாக்டர் சங்கரன்: இதயம், ரத்தக் குழாய்களுக்கு ரத்தத்தை பம்ப் செய்து அனுப்பும் போது, ஒரு குறிப்பிட்ட அளவு அழுத்தத்தைக் கொடுப்பதால் தான், ரத்த ஓட்டம் சீராக நடைபெறுகிறது. அந்த அழுத்தம்தான் பிளட் பிரஷர் என்கிற ரத்த அழுத்தம். இதயம் அதிக வேகத்தில் ரத்தத்தைச் செலுத்தும் போதும், இரத்தக் குழாய்களில் ஏதாவது தடை இருக்கும் போதும் அதிக அழுத்தம் உருவாகிறது. இந்த அழுத்தத்தில் இரண்டு வகை உண்டு. இதயம், இரத்தக் குழாயினுள் ரத்தத்தைச் செலுத்தக் கொடுக்கிற அழுத்தம் 'சிஸ்டாலிக் பிரஷர்' என்றும், பம்ப் செய்யப்படும் ரத்தத்தை, ரத்தக் குழாயினுள்ளேயே தங்க வைக்கக் கொடுக்கப்படும் அழுத்தத்தை 'டயஸ்டாலிக் பிரஷர்' என்றும் சொல்லுவார்கள். சராசரி மனிதனுக்கு 120 (சிஸ்டாலிக்) — 80 (டயஸ்டாலிக்) என்பது நார்மலான பி. பி. நாற்பது வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 140 — 90 சகஜம். இதற்கு அதிகமாக ரத்த அழுத்தம் இருந்தால் அது உயர் ரத்த அழுத்தம் எனப்படுகிறது. குறைவாய் இருந்தால் குறைந்த ரத்த அழுத்தம். பொதுவாகக் குறைந்த ரத்த அழுத்தம் எனில் கவலைப்பட வேண்டியதில்லை. அதே சமயம் ஹார்ட் அட்டாக், ஷாக் போன்றவை காரணமாகக் குறைந்த பி. பி. ஏற்பட்டால் உடனடியாகச் சிகிச்சை அளிக்கப்பட வேண்டும். ஆனால், உயர் பி. பி. என்பது





டாக்டர் நர்லோங்கேஷ் பார்வையைக் கண்டுப்பா மடைப்பிடிக்கிறாரல்!

வெள்ளணுக்களில் நான்கு வகைகள் உள்ளன. அதில் ஒன்றுதான் ஈஸ்னோஃபில். சாதாரணமாக இரத்தத்தில் ஈஸ்னோபிலின் எண்ணிக்கை 0 முதல் 6 வரை இருந்தால் நார்மல். இது அதிகரிக்கும் போது ஈஸ்னோபிலியா தொல்லை ஏற்படுகிறது. இதைக் கவனிக்காமல் இருந்து விட்டால், ஆஸ்துமாவில் கொண்டு போய் விட்டு விடும். பல்வேறு அலர்ஜிகளுக்கும் டெஸ்ட் செய்து, ஒருவருக்கு எது அலர்ஜி என்று கண்டறிந்து, அதற்குரிய எதிர்ப்பு வாக்ஸின் போடுவதன் மூலமும் அலர்ஜி பொருளைத் தவிர்ப்பதன் மூலமும் நிவாரணம் கிடைக்கும்.

ஆபத்தானது. கவனிக்காமல் விட்டு விட்டால், பின்னர் அதனால் ஸ்ட்ரோக், பக்கவாதம், ஹார்ட் அட்டாக், சிறுநீரகப் பாதிப்பு, கண் பார்வை குறைவு போன்ற ஆபத்தான விளைவுகள் நிகழலாம். ஒருவருக்கு உயர் பி. பி. காணப்பட்டால், உடனடியாகச் சிகிச்சையை ஆரம்பிக்காமல், மூன்று மாத காலம் அவருடைய ரத்த அழுத்தத்தை ஆராய்ந்து அதன் பின்தான் முடிவு செய்வார்கள். உயர் பி.பி. காரர்கள் ஆயுள் முழுக்க மாத்திரை மருந்து சாப்பிட்டு வர வேண்டியது அவசியம். சில காலம் மாத்திரை சாப்பிட்டதும், பி. பி. குறைந்தாலும் கூட மாத்திரை சாப்பிடுவதை நிறுத்தக் கூடாது. நிறுத்தினால் மறுபடியும் பி. பி. அதிகரித்து விடும். டாக்டரின் அறிவுரைப்படி உயர் ரத்த அழுத்தம் மட்டுப்படும் போது மாத்திரைகளைக் குறைக்கலாம். அவ்வளவுதான்.

● **"ஜலதோஷம், மூக்கடைப்பு என்று டாக்டரிடம் போனால், ஈஸ்னோபிலியாவின் சதவீதம் என்ன என்பதை ரத்தப் பரிசோதனை மூலம் கண்டுபிடிக்க வேண்டுமென்கிறார்களே! ஈஸ்னோபிலியா என்றால் என்ன? ஜலதோஷத்துக்கும் அதற்கும் என்ன சம்பந்தம்?"**

**— எஸ். யோகலிங்கம், சென்னை — 82.**

டாக்டர் சுப்பு பழனியப்பன், காது, மூக்கு, தொண்டை நிபுணர்: அடிக்கடி ஜலதோஷம் பிடிப்பது, தலை கனமாய் உணர்தல், வறட்டு இருமல் இவை ஈஸ்னோபிலியாவின் அறிகுறிகள். அலர்ஜியும் ஈஸ்னோபிலியாவுக்கு ஒரு காரணம். தட்பவெப்ப நிலை, சுற்றுப்புறம் மாசுபடுதல், தூசி, சில உணவு வகைகள், தயிர், மோர், ஜூஸ், பால் என ஏதோ ஒன்று அலர்ஜியாக இருக்கலாம். இதற்கு மருந்து சாப்பிட்டால் நிவாரணம் கிடைக்கும். ஆனால் மருந்தை நிறுத்திய சில நாட்களில் மறுபடியும் பிரச்னை ஆரம்பித்து விடும்! இரத்தத்தில் உள்ள நோய் எதிர்ப்புச் சக்தி கொண்ட

● **"'மயோபியா' எனக் கூறப்படும் கிட்டப் பார்வை நோய்க்கு, அறுவைச் சிகிச்சை மூலம் நிரந்தர நிவாரணம் செய்ய இயலுமா?"**

**— சுதா மகாலிங்கம், சென்னை — 20.**

கண் மருத்துவ நிபுணர் டாக்டர். ஆர். ரவீந்திரன்: மைனஸ் மூன்றிலிருந்து, மைனஸ் ஆறு வரைக்கும் உள்ள கிட்டப் பார்வையை, ரேடியல் கரட்டாடமி என்ற அறுவைச் சிகிச்சை மூலம் முழுதும் குணப்படுத்தலாம். மைனஸ் மூன்றுக்குக் கீழ் உள்ளவர்களுக்கும் இந்த அறுவைச் சிகிச்சை செய்யலாம். ஆனால் அது தேவையற்றது. மைனஸ் ஆறுக்கு மேல் இருந்தால், கிட்டப் பார்வையின் பவரைக் குறைக்கலாம். முழுதுமாகக் குணப்படுத்துவது முடியாது.

● **"கண்ணாடி அணிவதன் மூலம் மயோபியாவைக் குணப்படுத்த முடியுமா? அல்லது கட்டுப்படுத்த இயலுமா?"**

டாக்டர் ரவீந்திரன்: கண்ணாடி அல்லது காண்டாக்ட் லென்ஸ் மூலம் கிட்டப் பார்வை உள்ளவரின் பார்வையைத் தெளிவுபடுத்தலாம். ஆனால் கண்ணாடி அணிவதன் மூலம் மயோபியாவைக் குணப்படுத்தவும் முடியாது; கட்டுப்படுத்தவும் முடியாது. ஏனென்றால் மனித உடம்பின் வளர்ச்சி இருக்கும் வரை, கண்ணின் வளர்ச்சியும் இருந்து கொண்டே வருவதால், கண்ணின் அளவு அவ்வப்போது மாறுபடும். கண்ணின் வளர்ச்சி இருக்கும் வரை, கிட்டப் பார்வை கூடிக் கொண்டுதான் இருக்கும். இதைக் கண்ணாடி அணிவதால் கட்டுப்படுத்த முடியாது.

டாக்டர் பதில்களின் தொகுப்பு:

**சாருகேசி, சந்திரமௌலி, நிலா ராஜா.**


லைம்
ஸின்தால்
Godrej
CINTHOL
THE LIME FRESH DEODORANT SOAP
LIME
அனைத்திலும் புத்துணர்ச்சி மிக்க லைம் சோப்
அனைத்திலும் உன்னதமான லைம் சோப்
துர்நாற்றம் அகற்றும் ஒரே லைம் சோப்

# உங்கள் பால்காரரர் இரவு 10 மணிக்கு பால் கொண்டு தருவாரா?

என் பால்காரரர் தருவார்

உங்கள் மகன் இரவு வெகுநேரம் படிக்க விரும்புகிறான். அவனுக்கு காப்பி வேண்டும். பாட்டியோ இரவு சாப்பாட்டுக்குப் பதிலாக பால் வேண்டும் என்கிறார். அந்த நேரத்தில் எங்கு சென்று பால் வாங்குவீர்கள்? அமுல் மில்க் பவுடர் கைவசம் வீட்டில் வைத்திருங்கள். கவலையே இருக்காது. பால் தாமதமாக வராது. தீர்ந்து போகாது. திரிந்தும் போகாது.

அமுல் மில்க் பவுடர் கொண்டு தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




## அமுல் மில்க் பவுடர்

RADIUS/AMP/1-86 TAM

வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.



விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ. ஆப்பரேடிவ் மில்க் மார்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001



# சிலைச் சிரிப்பு

"Al Jaffee Blows a Fuse"
— ஜோக் புத்தகத்திலிருந்து
தேர்ந்தெடுத்தவர்: 'சார்லி'


















# தாய்-1

## சுஜாதா

பரிசோதனைக்குப் பின் சோப் போட்டுக் கை கழுவிக் கொண்டு, டாக்டர் சாவித்ரி திரையைத் திறந்தாள். அந்தப் பெண் தன் உடைகளைச் சரி செய்து கொண்டு, பரிசோதனைக் கட்டிலிலிருந்து இறங்கும் போது, கண்ணாடி வளையல்கள் ஒலித்தன. இருபது வயது இருக்கும். அடர்த்தியான முரட்டுத் தலை மயிர்; உதடுகளில் ஒரு முழுமை; அழுத்தம்; காட்டிக் கொடுக்காத பார்வை.

டாக்டர் சாவித்ரி தன் மேசைக்கு வந்து எதிர் நாற்காலியில் உட்கார்ந்திருந்த தாயைப் பார்த்தாள். தலையில் நரைக் கீற்றுகள்; நெற்றியில் பொட்டுத் தழும்பு. கவலை எழுதிய நெற்றி, கவலை தோய்ந்த கண்கள், கவலையில் நடுங்கும் விரல்கள்.

''டாக்டரம்மா ஒண்ணுமில்லைதானே! நல்ல சேதி சொல்லப் போறீங்கதானே?''

''இல்லைம்மா, கொஞ்சம் அட்வான்ஸ் கேஸ். நல்லா ஃபார்ம் ஆய்டுத்து.''

''அய்யோ அப்படின்னா?''

''பெத்துக்கறதுதான் நல்லது. அபார்ஷன் பண்ணினா உயிருக்கு ஆபத்து.''

''அடிப் பாவி!'' என்று தன் மகளைப் பார்த்தாள்! ''எங்க வெச்சுப்பேன்...? எப்படி ஏச்சுப் பேச்சைச் சமாளிப்பேன்? டாக்டர், நீங்க எப்படியாவது...''

''முடியாதும்மா. நான் செய்ய மாட்டேன். ஆபத்து. லேட்டு!''

''அடிப்பாவிப் பெண்ணே. இத்தனை நான் கழிச்சுச் சொல்றியே. தொடைகாலி! ஓடுகாலி! அப்பனைத் தப்பாம கொண்டு பொறந்திருக்கியே!'' என்று பெண்ணின் முதுகில் இரண்டு கைகளாலும் மொத்தி, கன்னத்தைக் கிழிக்க முற்பட்டாள். அவள் தாங்கிக் கொண்டு பேசாமல் இருந்தாள்: டாக்டர் சாவித்ரிக்கு அவளைப் பார்க்க ஆத்திரம் வந்தது. தாய்க்கு இத்தனை கவலை தந்திருக்கிறோமே என்று இம்மி வருத்தமுமின்றி 'ஃபெமினா'வைப் புரட்டிக் கொண்டிருந்தாள்.

''என்ன அழுத்தம் பாருங்க, டாக்டர்.''

''உன் பேர் என்ன?''

''ரஞ்சனா.''

''ரஞ்சனா உன் நிலைமை உனக்குச் சரியாத் தெரியுமா?''

''ம்.''

''யு ஆர் ப்ரெக்னெண்ட். ஸிக்ஸ்டீன் வீக்ஸ்!''

''ம்.''

''எத்தனை மருந்து, மாயம், மாத்திரை எல்லாம் இருக்கு. முழுங்கித் தொலைக்கிறது தானே! ராட்சசி.., என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கிறதுக்குன்னே பிறந்தியே.''

''வாட் ஹாப்பண்ட் ரஞ்சனா? ஏதும் ப்ரிக்காஷன் எடுத்துக்கலையா?''

''பிக்னிக் போறப்ப மிஸ் ஆயிடுத்து டாக்டர்.''

''இதுக்குக் காரணம் யாருன்னு தெரியுமா?''

''ம்.''

''யார்! பேர் சொல்லு. கண்டம் கண்டமா வெட்டிப் போட்டுடறேன்; உன்னையும் சேர்த்து! மூதேவி உன்னை... உன்னை...'' மறுபடி முதுகில் மொத்த அவள் தலை பலமாக அசைந்தது.

''அந்தாளைக் கூட்டி வர முடியுமா?''

''அவனுக்குக் கல்யாணம் ஆய்டுத்து.''

''யாருடி ப்ரசன்னாவா?''

''உனக்குத் தெரியாதும்மா. காலேஜ்லே பழக்கம்.''

''கல்யாணமானவன் கூடவா?''

''இப்பத்தாம்மா கல்யாணம் ஆச்சு.''

''ரஞ்சனா அவன் யாராயிருந்தாலும் பொறுப்பு ஏற்றுக்கணும். பேர் சொல்லு.''

''யோகி.''

''யோகியா... அது என்ன பேரு?''

''யோகேஷ்.''

''போன் நம்பர் தெரியுமா?''

''ம்.''

போன் செய்த போது யோகேஷ் தன் புது மண மனைவியுடன் தேனிலவுக்குப் போயிருப்பதாகவும் அடுத்த மாதம் பத்தாம் தேதி வருவதாகவும் தெரிந்தது.

''அவன் அப்பா, அம்மா எங்கே இருக்காங்க?''

''துபாய்ல.''

மிகுந்த கலவரத்துடன், ''என்னத்தைப் பண்ணுவேன் எங்கே போவேன்...? டாக்டரம்மா, நீங்கதான் ஒரு வழி சொல்லணும். எனக்கு யாரும் இல்லை. தனியா...''



அவள் குரல் கடைசி வார்த்தைகளில் கம்மிப் போய், இரு கண்களிலும் கண்ணீர் உதிர்ந்து மேஜைக் கண்ணாடியில் மெல்லச் சேர்ந்து கொண்டது.

''பாருங்கம்மா, அபார்ட் பண்றது ரொம்ப ரொம்ப அபாயம். பேசாம பெத்துக்க ஏற்பாடு செய்துடுங்க.''

''எங்கே போவேன்? எங்கே வெச்சுப்

**மத்யமர் — வாசகர் விமர்சனம்:**

**உடனடியாக எழுதுங்கள்!**

'மத்யமர்' வரிசையில் சுஜாதா எழுதும் பத்தாவது கதை 'தாய்.' இந்தக் கதையைப் படித்தவுடன் உங்களுக்கு என்ன தோன்றுகிறது? உங்கள் விமர்சனம் எதுவாக இருந்தாலும் உடனடியாக ஓர் அஞ்சலட்டையில் எழுதிக் கல்கி அலுவலகத்துக்கு அனுப்புங்கள்.

கல்கியில் பிரசுரமாகும் ஒவ்வொரு விமர்சனத்துக்கும் ரூ. 25 பரிசு. சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50 சிறப்புப் பரிசு.

முடிவு தேதி: 16.8.90.

பேன்? அக்கம் பக்கம் எல்லாம் துளைச்சுடுவாங்களே!''

''உறவுக்காரங்க யாரும் இல்லையா, ஒத்தாசைக்கு வரமாட்டாங்களா?''

''மச்சினர் இருக்கார், பழைய மாம்பலத்தில். சண்டை. அந்த வீட்டுப் பக்கம் தலை வெச்சுப் படுத்ததில்லை. பத்து வயசில தகப்பனைச் சாப்ட்டா. சொல்லிச் சொல்லிக் காட்டினா. ஏதோ ஒரு பித்தல் நகைக்குப் பேச்சுக் கேக்க வேண்டியிருந்தது. சொந்தக் காலில் நின்னு காட்டறேன்னு கட்டின புடைவையோட வெளியில வந்தேன். ஒரே பொண்ணுன்னு கடனை உடனை வாங்கிப் படிக்க வெச்சு ஓடா உழைச்சுச் சம்பாதிச்சுக் காலேஜுக்கு அனுப்பினா...'' மறுபடி அவளை முதுகில் குத்தி, ''சுமந்துண்டு வந்திருக்கா! சொல்லுடி... சொல்லு. வழி சொல்லு. என்ன பண்ணப் போறே? செத்...து ஒழியேன்.''

''ஏன் அனுப்பிச்சியாம்?'' என்றாள் ரஞ்சனா.

''என்னது?''

''பிக்னிக்குக்கு, பள்ளிக்கூடத்துக்கு, காலேஜுக்கு... ஏன் எல்லாத்தையும் 'என்கரேஜ்' பண்ணியாம்? பாட்டு கிளாஸ் டான்ஸ் கிளாஸ்... பரத நாட்டியம் தாதை தக்கத்தை...'' என்று கை விரல்களால் பூ பண்ணினாள் ரஞ்சனா.

டாக்டர் சாவித்திரிக்கு அவர்கள் இருவருக்கும் இடையே உள்ள பிணைப்பைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் பிரச்னை என்னவோ பெரிது.

''எங்கேயாவது ஆசிரமம் மாதிரி கொஞ்ச நாளைக்கு இந்தச் சனியனை வெச்சுக்கறாப்பல இடம் இருக்கா டாக்டர்?''

''ஆசிரமம் இல்லை. நர்ஸிங் ஹோம். எஸ். என். நர்ஸிங் ஹோம். ஆனா ரொம்பச் செலவாகும்.''

''எவ்வளவு?''

''கேட்டுச் சொல்றேன்.''

அந்த நர்ஸிங் ஹோமின் நம்பரைப் பார்த்து போன் செய்தாள்.

ரஞ்சனா, ''பசிக்கிறதும்மா,'' என்றாள்.

''பட்டினி கிடந்து சாகு!''

''டாக்டர் மிதிலா இருக்காங்களா...? ஆபரேஷன் தியேட்டர்லயா? நான் டாக்டர் சாவித்ரி. மறுபடி அரை மணியில் போன் பண்றேன்.''

போனை வைத்துவிட்டு, ''ரஞ்சனா, நீ செய்த காரியத்தினுடைய தீவிரத்தை உணர்ந்து பார். உங்கம்மாவுக்கு எத்தனை கவலை தர்றே நீ! எத்தனை மனக்கஷ்டம்.''

''ஆமாம்'' என்றாள் மையமாக.

''என்ன ஆமாம்?''

''அந்தப் பெண் தாயைப் பார்த்து, ''போலாமாம்மா, பேசியாச்சா?''

சாவித்ரிக்கு ஆத்திரம் வந்தது. ''யூ ஸ்டுப்பிட் கர்ள்! என்ன அலட்சியம் உனக்கு? என்ன கர்வம் உனக்கு? பாவப் புழுவே! ஒரு நிமிஷம் கட்டுப்பாடு இல்லாம சபலத்துக்கு இடம் கொடுத்ததால வந்த விபரீதத்தைப் பார்த்தியா? யூ ஸ்கம்!''

ரஞ்சனா டாக்டரை நிமிர்ந்து பார்த்த பார்வையில் எந்தவிதப் ப்ரதிக்ரியையும் இல்லை.

''டாக்டரம்மா இது அசடு! தொடைகாலி முண்டைக்கு எதுவும் தெரியாது. சின்ன வயசில் கண்ணாடி வளையல்காரன் பின்னாடி ஓடின போதே வீட்டோட வச்சுண்டு இருந்திருக்கணும். நல்ல ஸ்கூலுக்கு அனுப்பிச்சு நன்னாப் படிக்க வெச்சா உருப்படும்னு இதுக்கு எத்தனை பணம் காசு செலவழிச்சேன்! எத்தனை டிரஸ்ஸு! மாக்ஸியைக் கொண்டா, நிஜாரைக் கொண்டா... கேட்ட உடனே கொடுத்துடணும். இல்லை, மூஞ்சியைத் தூக்கி வெச்சுண்டு, 'நான் பள்ளிக்கூடம் போக மாட்டேன்!' இந்த க்ஷணம் மொபெட் வேணும்னா அஞ்சாயிரம் ரூபாய்க்கு எங்கே போவேன்? மச்சினர் கூட சண்டை போட்டுட்டு பாத்தியத்தில் கையெழுத்துப் போட்டுட்டுக் கோர்ட்டுக்குப் போகாம, காம்ப்ரமைஸ் வாங்கிண்டு, கிடைச்ச பணத்தில எதுக்குமே குறை வைக்காம, எனக்குன்னு ஏதும் வாங்கிக்காம, பாதி நாள் அரைப்பட்டினியா நான் இருந்துண்டு. இதுக்குப் பொட்லம் வாங்கித்

தந்து... தப்பு! பணக் கஷ்டம் தெரியாம வளர்த்தது தப்பு!''

''நீங்க வேலையில இருக்கீங்களா, அம்மா?''

''இல்லை. மகிளா உத்யோக்லு... அவாளுக்கு விட்டிலிருந்து பட்சணம், வததல் சப்ளை பண்ணுவேன். மாசம் அறுநூறு வர்றது.''

போன் மணி ஒலிக்க, ''டாக்டர் மிதிலா? நான் டாக்டர் சாவித்ரி பேசறேன். இங்கே ஒரு 'அவுட் ஆஃப் வெட்லாக்' கேஸ்... பதினாறு வாரம்... ஸ்கான் எடுத்துட்டேன்.''

தாய் அவள் முகத்தையே ஆர்வத்துடன் பயத்துடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''மதர் இஸ் புவர். அதிகம் சார்ஜ் பண்ணாதீங்க... ட்ரு ட்ரு... ஆமாம், குறைந்தபட்சம் எவ்வளவுன்னு சொன்னீங்கன்னா... அவ்வளவு ஆகுமா? தாங்க்ஸ், நான் லெட்டர் எழுதி அனுப்பறேன்.''

''என்ன டாக்டரம்மா?''

''குறைந்தபட்சம் பதினஞ்சாயிரம் ரூபாய் ஆகுமாம். குழந்தை பிறக்கிற வரைக்கும் அங்கேயே வெச்சுப்பாங்க. ரூம் சார்ஜ், ஆகாரம், டெஸ்ட்டுகள், பிரசவம், மருந்துகள் எல்லாத்துக்கும் சேர்த்து. அதுவும் இது 'கன்ஸஷன்' ரேட்டு. பணமுள்ளவங்களுக்கு எழுபத்தஞ்சு!''

''குழந்தை பிறந்தப்புறம்?''

''முதல் தினமே ஸரண்டர் டாக்குமெண்ட்ஸ்ல கையெழுத்துப் போட்டுக் கொடுத்துரணும். அவங்க பொறுப்பேற்றுப்பாங்க.''

''குழந்தையை என்ன பண்ணுவாங்க?''

டாக்டர் நிதானமாக ''வேண்டாம் வேண்டாம்'னு நீங்க சொல்றாப்பல 'வேணும் வேணும்'னு எத்தனையோ பேர் காத்திருக்காங்க. அவங்க யாருக்காவது போகும் குழந்தை. நீங்க யோசிச்சு, தீர்மானிச்சு சாயங்காலம் வாங்க.''

''என்கிட்டே அத்தனை பணம் இல்லையே டாக்டர்.''

''யார்கிட்டேயாவது கடன் கேட்டுப் பாருங்க. விடு கிடு ஏதாவது இருக்கா?''

''இல்லையே.''

''அந்தப் பையன்கிட்டே சண்டை போட்டு வாங்குங்க.''

''அதுக்கெல்லாம் சாமர்த்தியம் இருந்தா இந்த நிலைமைக்கு வந்திருப்பமா? எங்கே துபாய்க்கு ஓட முடியுமா? இல்லை ஹனிமூன் பின்னாடி அலைய முடியுமா? சொல்லுங்கோ! எங்கே போவேன், என்னத்தைப் பண்ணுவேன்? செத்துப் போயேன்! விட்டுக்குப் போனதும் ரெண்டு பேரும் கிரஸின் ஆயிலைக் கொட்டிண்டு நெருப்புப் பத்த வெச்சுண்டு ஒழியலாம், வா!''

''அதெல்லாம் வேண்டாம்!''

''ஊமத்தங்காயை... அரளி விதையை அரைச்சுக் கொடுத்துடறேன்.''

அந்தத் தாயின் ஏமாற்றங்கள் முழு வடிவம் பெற்று ஓர் ஆத்திர அலை அவளை ஆக்கிரமிக்க, ரஞ்சனாவின் தலை மயிரைப் பிடித்து உலுக்கினாள். முதுகில், கன்னத்தில், கழுத்தில் என்று தாட்சண்யமில்லாமல் அடித்தாள். வெறி வந்த புலி போல் இருந்தாள். அவ்வப்போது தன் தலையிலும் மடேர் மடேர் என்று அடித்துக் கொண்டு, மீண்டும் மகளை மொத்தினாள். அந்தப் பெண் அத்தனை அடியையும் தாங்கிக் கொண்டு ஏதும் பேசாமல் இருந்தது டாக்டருக்கு ஆச்சரியமாக இருந்தது.

''போதும்மா! இப்ப அடிச்சு ஏதும் பிரயோசனமில்லை.''

புயல் அடித்து ஓய்ந்தது போல, மழை நின்றது போல, மழைநீர் வாய்க்கால் வடிந்து முடிந்தது போல அவள் தன் உணர்ச்சிகள் அத்தனையும் காலியான நிலையில் உட்கார்ந்தாள். முகத்தைத் துடைத்துக் கொண்டு தன் மஞ்சள் பையிலிருந்து ஒரு பெருங்காய டப்பாவை எடுத்தாள். அதைத் திறந்து ரோஜா நிற மெலிசுக் காகிதப் பொட்டலத்தைப் பிரித்தாள். உள்ளே தங்கச் சங்கிலியும் மற்ற நகைகளும் இருந்தன.

''என்னம்மா இது?''

''இந்தப் பொண்ணுக்குக் கல்யாணத்துக்காக கொடி, திருமாங்கல்யம், தோடு, மோதிரம் பண்ணி வெச்சிருந்தேன். மொத்தம் பத்து சவரன் இருக்கும். வித்துடறேன். நீங்க நர்ஸிங் ஹோமுக்கு ஏற்பாடு பண்ணிடுங்கோ, டாக்டரம்மா!''

---

''சட்டப்படி குற்றம்னு தெரிஞ்சும் நீ ரெண்டு மூணு கல்யாணம் செஞ்சுக்கிட்டதுக்கு என்ன காரணம்?''

''மனச்சாட்சிதான்! ஃப்ரிட்ஜ், கலர் டி. வி., ரேடியோ, கிரைண்டர், ஸ்கூட்டர்... எல்லாத்தையும் ஒரே மாமனார்கிட்டேயிருந்து பிடுங்க மனச்சாட்சி இடம் கொடுக்கலை!''

— மேல்மங்கலம் பத்ரா.



# காவிரிக் கரையிலும் குடிநீர்ப் பிரச்னை!

**— அன்பில் பொய்யாமொழி (தி. மு. க.) யின் தொகுதி இது......**

திருச்சி நகரில் உள்ள ஆட்டோக்காரர்கள் மாதிரி அடாவடிப் பேர்வழிகள் யாருமே இருக்க மாட்டார்கள். மீட்டர் போட்டால் ஐந்து ரூபாய் கூட வராத தூரத்திற்குக் கொஞ்சம் கூட கூச்சப்படாமல் பதினைந்து ரூபாய் கேட்கிற அக்கிரமம் திருச்சியில்தான் நடக்கிறது. இந்த அக்கிரமத்திற்கு என்ன காரணம்?

''ஏராளமான ஆட்டோக்களுக்கு உரிமம் வழங்கப்பட்டுவிட்டது. ஆனால் அதற்குத் தகுந்தாற்போல் சவாரி கிடைப்பதில்லை. அதனால்தான் இப்படி....'' என்கிறார் திருச்சி நகரசபைத் தலைவர் மா. பால கிருஷ்ணன். எதற்காக அதிகப்படியான ஆட்டோக்களுக்கு உரிமம் வழங்கப்பட வேண்டும்? இந்தக் கேள்விக்கு நகரசபைத் தலைவரிடமும் சரி, எம். எல். ஏ. பொய்யா மொழியிடமும் சரி பதில் இல்லை. ஏன் பதிலில்லை? இதற்கு விடை சொல்வது

* அன்பில் பொய்யாமொழி எம். எல். ஏ.



போல் பேசுகிறார் திருச்சியிலுள்ள தமிழ் நாடு உபயோகிப்பாளர் பாதுகாப்பு கவுன் சிலின் செயலாளர் புஷ்பவனம்.

''திருச்சியிலுள்ள ஆட்டோக்காரர்கள் ஏன் இப்படி நடந்து கொள்கிறார்கள் என் பதை மாவட்ட ஆட்சித் தலைவரிடமே விளக்கியிருக்கிறேன். அவரிடம், 'இந்த ஆட்டோக்களுக்கெல்லாம் யார் சொந்தக் காரர்கள் என்பதைக் கண்டு பிடியுங்கள். அவர்களில் பெரும் பகுதி போலீஸ்காரர் களாகவும், ஆர். டி. ஓ. அலுவலகத்தில் வேலை செய்பவர்களாகவும், அரசியல் வாதிகளாகவும்தான் இருப்பார்கள். இந்த நிலையில் அவர்களிடம் பொதுமக்கள் கொடுக்கும் புகார்களுக்கு என்ன மரியாதை இருக்க முடியும்? எனவே, முதலில் இந்த நிலையை ஒழித்தாக வேண்டும்' என்று சொல்லியிருக்கிறேன். சொன்ன பிறகும் நடவடிக்கை ஏதும் எடுத்ததாகத் தெரிய வில்லை. எனவே, எங்கள் கன்ஸ்யூமர் கவுன்சில் இனி என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யோசித்துக் கொண்டிருக் கிறது....'' என்றார் புஷ்பவனம்.

அடுத்த அக்கிரமம் பன்றிகள். தெருக் களில் ஜனங்களை விடப் பன்றிகள் அதிகம் என்கிற அளவுக்குக் கட்டுப்பாடற்றுத் திரி கின்றன. காரணம் என்ன? பன்றிகளுக்குத் தோதானவொரு வாழ்வியல் சூழல் எந்த விதத்திலும் பாதிக்கப்பட்டுவிடக் கூடாது என்பதில் மிகமிக கவனமாக இருக்கிற திருச்சி மாநகரச் சாக்கடைகள்தான்! காவிரியோடு போட்டி போட்டுக் கொண்டு சாக் கடைகள் தெருக்களில் ஓடுவதேன்?

''திருச்சியில் பாதாளச் சாக்கடைத் திட்டம் முடிவடைந்து விட்டது. அனைவரும் தங்கள் வீடுகளிலுள்ள கழிவு நீர்க் குழாய் களைப் பாதாளச் சாக்கடையோடு இணைத்து விட்டால் இந்தப் பிரச்னை சுத்த மாகத் தீர்ந்து போய்விடும். அடுத்தது பன்றிகள் ஏராளம் என்பதையும் அவற்றை இதுவரை முழுமையாக ஒழிக்க முடிய வில்லை என்பதையும் ஒப்புக் கொள் கிறேன். காரணம், சிலருக்குப் பன்றி வளர்ப்

* சாலைநகர் மாதர் சங்கத்தினர்.

பதே தொழிலாக இருப்பதால் மனிதாபி மானத்தோடும் இப் பிரச்னையை அணுக வேண்டியிருக்கிறது....'' என்ற எம்.எல்.ஏ. பொய்யாமொழியை நாம் இடைமறித் தோம்.

''பன்றி வளர்ப்பதைத் தவிர வேறு தொழில் அவர்களுக்குத் தெரியாது என்கிற பட்சத்தில் அவர்களை வெள்ளைப் பன்றி களை வளர்க்கச் சொல்லலாம். நகருக்கு வெளியே அப்படிப்பட்ட பண்ணைகளைக் கூட்டுறவு முறையில் வைக்கக் கடன் வசதி பெறவும் நீங்கள் சிபாரிசு செய்யலாமே?'' என்று சொன்ன நமது யோசனையை எம்.எல்.ஏ. ஏற்றுக் கொண்டு அதன்படி செய்ய முயல்வதாகக் கூறினார். (இது பற்றியும் மற்ற பிரச்னைகள் பற்றியும் திருச்சி நகராட்சித் தலைவரின் கருத்துக்களைத் தனி பேட்டியில் பார்க்க).

மூன்றாவதாகக் குடிநீர்ப் பிரச்னை. ஆமாம்; காவிரிக்கரையோரத்திலேயே இருந் தாலும் திருச்சி நகரவாசிகளுக்குக் குடிநீர் ஒரு பிரச்னையாகத்தான் இருக்கிறது. எம்.எல்.ஏ. அன்பில் பொய்யாமொழியும் இதை ஒப்புக் கொண்டார்.

''போதுமான அளவுக்கு என் தொகுதியில் குடிநீர் கிடைக்கவில்லை என்பதை நானும் ஒப்புக் கொள்கிறேன். ஆயினும் தட்டுப் பாடு கிடையாது. நகராட்சிக்குள் வராத என் தொகுதி மக்களுக்கு லாரிகளில் கொண்டு சென்று குடிநீர் வழங்கப்பட்டு வருகிறது. காவிரி நீர் கிடைக்காத என் தொகுதி மக்களுக்கு காவிரி நீர் கிடைக்கச் செய்வதற் காக 1.5 கோடி செலவில் கூட்டுக் குடிநீர்த் திட்டம் ஒன்று போடப்பட்டு வேலை துவங் கப்படவுள்ளது. அதன்படி கிராப்பட்டி, மன்னார்புரம், காஜாமலை, கருமண்டபம் ஆகிய நான்கு இடங்களிலும் பம்பிங் ஸ்டேஷன்கள் அமைக்கப்பட்டு பம்ப் செய்யப்படும். இன்னும் இரண்டே ஆண்டு களில் அத்திட்டம் செயல்படத் துவங்கி

* காவிரியில் கலக்கும் சாக்கடை ...



விடும். அப்போது அனைவருக்கும் காவிரி நீர் கிடைக்கும்.''

''சாலை நகரிலுள்ள வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகளிலுள்ள மாதர் சங்கத்தினர் எங்களிடம் மிகவும் வேதனையோடு பல குறைகளைச் சொன்னார்கள். வீட்டு வசதி வாரியம் அளித்துள்ள வாக்குறுதிப்படி வெளிச்சுவர்களுக்கு இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை வெள்ளையடித்துத் தர வேண்டும். ஒவ்வொரு குடியிருப்புக்கும் மேலுள்ள தண்ணீர்த் தொட்டிகளைச் சுத்தம் செய்து தர வேண்டும். இதன்படி வாரியம் நடக்கவே யில்லை. காம்பவுண்டுச் சுவர் இல்லாததால் குடியிருப்பு முழுவதிலும் பன்றிகளின் நடமாட்டம். நகராட்சியின் பராமரிப்பு இல்லாததால் சாக்கடை நீர் தேங்கிக் கிடக்கும் நிலை. குப்பை கொட்டுவதற்குக் குப்பைத் தொட்டிகளைக் கூட நகராட்சி வைக்கவில்லை. இது மாதிரி எக்கச்சக்கக் குறைகளைச் சொன்னார்கள்....''

''நான் வோட்டுக் கேட்கச் சென்றபோது அவர்கள் என்னிடம் இதையெல்லாம் சொல்லவே இல்லை. அங்குள்ள சிறிய பூங்காவின் பராமரிப்புப் பற்றித்தான் சொன்னார்கள். உடனே கவனித்தேன். இனி நானே நேரில் சென்று மற்ற குறைகளைக் கேட்டுச் செய்ய வேண்டியதைச் செய்கிறேன்.''

''உறையூரிலுள்ள பஞ்சவர்ண சுவாமி கோயிலுக்குச் சொந்தமான வீட்டு மனைகளில் வீடு கட்டிக் கொண்டு வசிப்பவர்களுக்கே அந்த மனைகளையெல்லாம் விலைக்கு விற்கப் போவதாகச் சொல்லப்பட்ட விஷயம் இப்போது என்னவாயிற்று?''

''அது பற்றி ஆராய ஐவர் குழு ஒன்று நியமிக்கப்பட்டுள்ளது. விரைவில் குடியிருப்போருக்கே அந்த மனைகள் விற்பனை செய்யப்படும்.''

''கோ. அபிஷேகபுரம் பேரூராட்சியைச் சேர்ந்தது கருமண்டபத்திலுள்ள ராம்நகர். அதையொட்டியே சுடுகாடு. 'சுடுகாடு இருப்பதில் எங்களுக்கு ஆட்சேபணையில்லை. பிணங்களைக் கொண்டு வந்து புதைப்பதிலும் இல்லை. ஆனால், பிணங்கள் எரிக்கப்படும்போது அதன் துர்வாசனையை எங்களால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கூப்பிடு தூரத்திற்குள்ளேயே எரிக்கப்படுவதால் பெண்களும் குழந்தைகளும் அதைக் கண்டு பயந்தும் போகிறார்கள். இதை தவிர்க்க, பிணங்களை மின்சார முறை மூலம் எரிக்கச் செய்யலாம். அதற்கு முன் குறைந்த பட்சம் சுடுகாட்டுக்கும் எங்கள் ராம்நகருக்கும் இடையில் ஒரு தடுப்புச் சுவராவது எழுப்பி, எங்கள் பார்வையிலிருந்தாவது பிணங்கள் எரிவதைத் தவிர்க்கச் செய்யலாம்' என்று அந்நகரைச் சேர்ந்த மல்லிகார் ஜுனனும் மற்றவர்களும் சம்பந்தப்பட்ட இடங்களை நேரிலேயே எங்களுக்குக் காட்டினார்கள். இன்னொரு வேடிக்கை.... பிணங்கள் எரிக்கப்படும் ஷெட்டுக்கு அருகிலேயே குழந்தைகள் சத்துணவுக் கூடமும் இருக்கிறது.....''

''இப்பிரச்னை எனக்கும் தெரியும். முதலில் தடுப்புச் சுவர் எழுப்புவது என்றும் தீர்மானித்துள்ளோம். அது எந்த நிலையில் இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள கோ. அபிஷேகபுரம் பேரூராட்சித் தலைவர் ரவியை உடனே வரவழைக்கிறேன். அவரிடமே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்...'' என்று பொய்யாமொழி போன் செய்ய, அடுத்த சில நிமிடங்களில் அவரும் வந்து சேர்ந்தார்.

''அந்த இடத்திலுள்ள சுடுகாட்டை வேறு இடத்திற்கு மாற்றுகிற ஒரு யோசனையும் எங்களிடம் இருக்கிறது. ஆனாலும் அது நாளாகும் என்பதால் அந்தப் பகுதி மக்களின்

''நகரில் திரியும் பன்றிகளை ஒழிக்க ஏதும் நடவடிக்கை எடுக்கவில்லையா?''

''சுடச் சொல்லிச் சொன்னோம். அதன்படி சிலவற்றைச் சுட்டார்கள். அப்படிச் சுடப் போனவர்களின் வீடுகளுக்குப் பன்றிகளின் சொந்தக்காரர்கள் சென்று மிரட்டியதால் யாரும் கூட முன்வரவில்லை. அதனால் வேறு வழியின்றி அது நிறுத்தப்பட்டு விட்டது.''

''வெளி மாவட்டங்களிலிருந்து ஆட்களைக் கொண்டு வந்து சுடச் செய்தால் பிரச்னை சுலபமாகத் தீர்ந்து விடுமே?''

''நீங்கள் சொன்ன இதே யோசனையைத் தான் நாங்களும் செய்யலாமென்றிருக்கிறோம்.''

''எங்கு பார்த்தாலும் சாக்கடை ஒரு பிரச்னையாக இருக்கிறது!''

''அது இல்லாமலிருக்கத்தான் பாதாளச் சாக்கடையில் இணைப்புக் கொடுக்குமாறு பொதுமக்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். அப்படிக் கொடுத்து விட்டால் நகரில் ஓடும் உய்யக் கொண்டான் வாய்க்காலும் சுத்தமாகி விடும். சாக்கடை நீர் காவிரியில் சென்று கலப்பதும் தடுக்கப்பட்டுவிடும்.''

''வீடுகளுக்குப் பாதாளச் சாக்கடை இணைப்புக் கொடுக்க நகராட்சி ஊழியர்கள் இரண்டாயிரம், மூவாயிரம் என்று லஞ்சம் கேட்பதாகச் சொல்கிறார்களே?''

''அப்படி யாரும் கொடுக்க வேண்டியதேயில்லை. எஸ்டிமேட் தொகை என்னவோ அதை மட்டும் கொடுத்தால் போதும். ஆனால் அதற்கு முன் பாதாளச் சாக்கடை இணைப்பு வரை உள்ள மற்ற வேலைகளையெல்லாம் வீட்டுக்காரர்களே செய்து கொள்ள வேண்டும். அப்படிச் செய்து விட்டால் எஸ்டிமேட் தொகை என்னவோ அதைக் கொடுத்தால் போதும். அதிகம் கேட்டால் என்னிடம் வந்து புகார் செய்ய

# "குறையைக் கூறுங்கள்; களையக் காத்திருக்கிறோம்!"



**— திருச்சி நகர சபைத் தலைவர் (தி. மு. க.) பாலகிருஷ்ணன் பேட்டி**

லாம். உடனே நடவடிக்கை எடுக்கத் தயாராய் இருக்கிறேன்.''

''நகரில் சில இடங்களில் குப்பைத் தொட்டிகள் கூட இல்லை...''

''குறிப்பாகச் சொல்லுங்கள்.''

''சாலை நகர் வீட்டு வசதி வாரியக் குடியிருப்புகளில் சுத்தமாக இல்லை.''

''உடனடியாக வைக்க ஏற்பாடு செய்கிறேன்.''

''சிந்தாமணி பஸ் நிலையம் சந்தைக்கடை போல் இருக்கிறது!''

''அ. தி. மு. க. ஆட்சியில் அதற்காக 25 லட்சம் ஒதுக்கப்பட்டது. நகராட்சித் தேர்தலில் தி. மு. க. ஜெயித்ததும் அத்தொகை திருநெல்வேலிக்கு மாற்றப்பட்டு விட்டது. இப்போதுதான் மீண்டும் அதற்கு நாற்பது லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. விரைவில் அழகான பஸ் நிலையம் அமைக்கப்படும்.''

பக்கத்திலேயே காவிரி ஓடியும் கூட நகரில் போதுமான அளவுக்குக் குடிநீர் கிடைக்கவில்லை என்கிறார்கள்.''

''ஆளொன்றுக்குத் தினமும் 25 காலன் குடிநீர் வழங்குகிறோம். இது போதாதா? குடிநீர் என்பது குடிப்பதற்கு மட்டும்தான் என்பதைப் பொதுமக்கள் நினைப்பதேயில்லை. பத்திரிகைக்காரர்களும் எதை வேண்டுமானாலும் எழுதி விடுகிறார்கள்!''

''அப்படியில்லை. அகமது காலனியில் உள்ள சாய்பாபா தெருவில் குடிநீர்க் குழாயே இல்லை. வீதி விளக்குகளும் இல்லை.''

''நான் பார்க்கச் சொல்லுகிறேன்.'' (அச்சமயம் ஆறுமுகம் என்ற இளநிலைப் பொறியாளர் ஒருவர் வர அவரிடம் விசாரிக்கிறார். அப்போது நாம் குறுக்கிடுகிறோம்.)

''வேண்டுமானால் இந்த ஜூனியர் எஞ்ஜினியரை எங்களோடு அனுப்பி வையுங்கள். அவரே எங்களோடு நேரில் வந்து பார்க்கட்டும்.''

''சரி, அனுப்பி வைக்கிறேன். உடனே நடவடிக்கையும் எடுக்கிறேன்.''

**நா**ம் நகராட்சித் தலைவர் பாலகிருஷ்ணனிடம் விடைபெற்றுக் கொண்டு, இளநிலைப் பொறியாளர் ஆறுமுகத்தையும் அழைத்துக் கொண்டு அகமது நகருக்குச் சென்றோம். நாம் சொன்னது உண்மையே என்பதை அவரும் நேரடியாகக் கண்டும், அங்குள்ள மக்களை விசாரித்தும் தெரிந்து கொண்டார். பிறகு அவற்றை நகராட்சித் தலைவரிடம் சொல்லி, உடனடியாக ஆவன செய்வதாக வாக்களித்தார்.

---

வேண்டுகோள்படி உடனடியாக ஒரு தடுப்புச் சுவர் கட்ட ஏற்பாடு செய்கிறோம்...'' என்ற கோ. அபிஷேகபுரம் பேரூராட்சித் தலைவர் ரவியிடம் அவர்மேல் அவரது பேரூராட்சிக் கவுன்சிலர் ஒருவர் கூறிய ஊழல் குற்றச்சாட்டுகளையெல்லாம் விவரித்து விளக்கம் கேட்டோம்.

அனைத்தையும் மறுத்தார் பேரூராட்சித் தலைவர் ரவி. ''பேரூராட்சி தொடர்பான வேலைகள் எல்லாம் டெண்டர் மூலமே செய்யப்படுகின்றன. அதில் நான் லட்சக் கணக்கில் கமிஷன் அடித்துக் கொண்டிருக்கிறேன் என்பதும், அந்த கமிஷனில் தான் நான் வீடு வாங்கினேன் என்பதும் சுத்தப் பொய். பதினேழாயிரம் ரூபாய் கட்டி ஹவுஸிங் போர்டில்தான் வீடு வாங்கினேன். என்மேல் இப்படிப்பட்ட பொய்யான குற்றச்சாட்டுகளைச் சுமத்துகிற அவர் அ.தி.மு.க. கவுன்சிலர். அவருடைய ஆட்களுக்கு நான் முறைதவறி ஏதும் செய்யவில்லை என்கிற தனிப்பட்ட கோபத்தில்தான் இப்படிப் பொய்யான குற்றச்சாட்டுகளை என்மேல் சுமத்திக் கொண்டிருக்கிறார். உண்மையைச் சொன்னால் அவர் தமது வார்டில் உள்ள மக்களுக்கு இன்னின்ன வசதிகள் வேண்டுமென்று இதுவரை கேட்டதே இல்லை; தமது பாப்புலாரிட்டிக்காகவும் தனிப்பட்ட விரோத உணர்ச்சி காரணமுமாகவே வேலை செய்து கொண்டிருக்கிறார்....'' என்றார் ரவி.

**மீ**ண்டும் எம். எல். ஏ பொய்யாமொழியிடமே கேட்க ஆரம்பித்தோம்.

''சிந்தாமணி பகுதியில் வசிக்கும் நகர சுத்திப் பணியாளர்களுக்கு ஒரு 'மயான ரதம்'

தருவதாக உங்கள் தந்தை அன்பில் தர்மலிங்கமே வாக்களித்திருந்தார். ஆயினும் அது இதுவரை வழங்கப்பட வில்லையாமே?''

''அது வழங்கப்படும் நிலையில் அத்தொழிலாளர்கள் இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்து, ஒரு கோஷ்டி வேண்டுமென்றும் இன்னொரு கோஷ்டி வேண்டாமென்றும் சண்டையிட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டார்கள். அதனால்தான் வழங்கப்பட வில்லை. அவர்கள் சேர்ந்து வ ர ட் டு ம். நாளைக்கே வழங்கிவிடுகிறேன்.''

''ஓர் எம். எல். ஏ. என்ற முறையில் உங்கள் தொகுதியின் வளர்ச்சிக்கு என்ன செய்கிறீர்கள்?''

''இங்கு பெரிய தொழிற்சாலைகளை இனி ஏற்படுத்த இயலாது என்பதால், நூறு பெண்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு நெசவுப் பயிற்சி தர ஏற்பாடு செய்தேன். அவர்களும் இப்போது பயிற்சியை முடித்து விட்டார்கள். இனி அவர்களாகவே 'அஞ்சுகம் நெசவுக் கூட்டுறவு சொசைட்டி' என்றபெயரில்ஒன்றாக இணைந்துகூட்டுறவு முறையில் நெசவு செய்து லாபம் பெற ஏற்பாடு செய்து கொண்டுள்ளேன். மேலும் அதுபோல் பெண்களைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி தரலாமா என்றும் யோசித்துக் கொண்டிருக்கிறேன். இவற்றோடு இங்குள்ள குடிசைவாசிகள் குடிசை மாற்று வாரிய வீடுகளை விரும்பவில்லை. அவர்கள் வசிக்கும் இடத்திற்குப் பட்டா தந்தால் போதும் என்கிறார்கள். அரசிடம் கோரிக்கை விடுத்தேன். சதுர அடி பத்து ரூபாய் என்று அவர்களுக்கே இந்த இடங்களை விற்க அரசும் முன் வந்துள்ளது. இந்த இரண்டும் நானாகவே என் தொகுதிக்குச் செய்தவை. இன்னும் என்னென்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

''தொகுதிப் பக்கம் அடிக்கடி சென்று சுற்றிப்பார்த்துக்குறைகளைக்கேட்பதில்லை என்று பலரும் சொல்கிறார்கள்....''

''நான் என் தொகுதியில் ஏதாவதொரு பகுதிக்குப் பொதுக் கூட்டம் பேசச் சென்றாலே அப்பகுதிக்குச் சென்று விட்டதாகக் கணக்கில் எடுத்துக் கொண்டு விடுகிறேன். அது தவறு என்று இப்போது தான் புரிகிறது. இனி, முன்பு வோட்டுக் கேட்கச் சென்றது போலவே தெருத் தெருவாகச் சென்று மக்களின் குறைகளைக் கேட்கிறேன். நான் வரும் போதுதான் குறைகளைக் கூற வேண்டும் என்பதில்லை. எப்போது வேண்டுமானாலும் என் வீட்டுக்கு வந்து கூறலாம். என் தொகுதி மக்களுக்காக என் வீட்டுக் கதவுகள் எல்லா நேரமும் திறந்தே இருக்கின்றன.....'' என்றார் அன்பில் பொய்யாமொழி.

— இளங்கோவன்

வண்ணப்படங்களும், படங்களும்: சுபா






ரேவதி வாய் விட்டு மனம் விட்டுச் சிரிப்பதைக் கண்டு ரசித்து, 'நல்லாச் சிரி தாயம்மா', இப்படி ஒரு நாள் நீ சிரிப்பியான்னு எத்

கிராமம் கிராமமாய்ச் சென்று கூத்துக் கட்டிப் பிழைப்பு நடத்தும் கார்த்திக்; அவரோடு அனாதையாய் வந்து ஒட்டிக் கொண்டு துணை நிற்கும் சின்னி ஜெயந்த்; கார்த்திக்கைக் கண்டித்து வளர்ப்பதாய் எண்ணிக் கொண்டு அவரை மகா செல்லக் கொடுக்காய் ஆக்கி விட்ட அன்னை மனோரமா. இவர்கள் தான் மூல கருதி.

கோமகவரப் பண்ணையார் வில்லியனூரானின் (சண்முக சுந்தரம்) செல்ல மகள் குஷ்பூவுக்கு இந்தக் கார்த்திக்கை ஓட ஓட விரட்டி வேடிக்கை பார்ப்பதில் படா குஷால்.

அப்பாவி கார்த்திக் மனோரமாவிடம் கெஞ்சிக் கூத்தாடி, தோழன் சின்னியோடு அவரைப் பண்ணையாரிடம் பெண் கேட்க அனுப்பி வைக்க, அப்போதே மனோரமா பயந்து நடுங்கி, 'ஏண்டா டேய், நாம ஒரு வேளைக் கஞ்சிக்கே வழியத்தவங்க; அவங்க அந்தக் கஞ்சியைச் சட்டைக்குப் போட்டுக்கினு விறைப்பாத் திரியறவங்க. அவங்ககிட்ட போயி...' என்று தயங்குகிறார்! (சுருக் வசனங்களுக்கு ஷொட்டு!)

பண்ணையாரிடம் அஞ்சி நடுங்கிப் பெண் கேட்டு, அவரது கண் ஜாடையில் அடியாட்களிடம் கன்னா பின்னாவென்று அடிபட்டு, அந்த அவமானத்தில் கூனிக் குறுகிப் படுத்து, ஒரு மின்னல் தெறித்து மறைந்தாற் போல அஸ்தமனமாகிப் போகிறார் மனோரமா.

ரேவதி கதாநாயகி. அதென்னவோ அப்படியொரு மரியாதைக்குரிய மெச்சூரிட்டி தெரிகிறது ரேவதியிடம்.

வெறும் கலகலப்புக்கு அப்பாற்பட்ட காரெக்டர் தமக்குக் கைவரும் என்பதை எத்தனை சிக்கென்று பிடித்துக் காட்டியிருக்கிறார் ஜனகராஜ்! வளர்ப்பு மகனை ஏங்கியிருக்கேன் நான்!' என்று நெகிழ்கிறாரே, அது போதுமே!

'என்னது, தூங்க வைக்கப் பாட்டா? எங்கே, பாட்டுப் பாடி என்னைத் தூங்க வையுங்க பார்க்கலாம்,' என்று கேட்டதும் சும்மா சொல்லக் கூடாது, கார்த்திக் டேப் அடித்து எழுப்பியிருக்கும் இசையில் இளையராஜா நிஜமாகவே விழி செருகப் பண்ணியிருக்கிறார்.

நடிப்புக் கல்லூரி இறக்குமதி உதயகுமாரின் திரைக்கதை, வசனம், டைரக்ஷனில் தரம் இருப்பது மட்டுமல்ல; தள்ளுபடிகளும் அதிகமாகக் காணோம் என்பதை ஒப்புக் கொண்டு இளையதலைமுறையை மாலை சூட்டி வரவேற்கத் தோன்றுகிறது.

— பி. எஸ். எஸ்.

## ரிவெஞ்ச்

தாத்தாவைக் கொலை செய்து விடும் பெரிய மனிதரைப் பழிவாங்கப் புறப்படுகிறான் பேரன் — இதுதான் கதை. பேரனாக நடிப்பவர் ஜாக்கி சான். சிரித்துக் கொண்டே சண்டை, அழுது கொண்டே சண்டை, நகைச் சுவையுடன் சண்டை, பரதநாட்டியத்தை நினைவு படுத்தும் சண்டை என்று நவரச வாரியாக. முதலிலிருந்து முடிவு வரை, சிலிர்க்க வைக்கும் வகையில்.

மருந்துக்குக் கூடப் பெண் வாடையே இல்லை. குங்ஃபூவை மட்டுமே நம்ப, அந்த நம்பிக்கை கைகொடுத்திருக்கிறது. அடுத்து வரவிருக்கும் சில தமிழ்ப் படங்களில் இதிலிருந்து ஓரிரு சண்டைக் காட்சிகளை எதிர் பார்க்கலாமா?

## பட்டணத்தில் பெட்டி

கொஞ்சம் விதேசிக்கலவை. கொஞ்சம் சுதேசி மணம். கொஞ்சம் டுஷ்ஷும். கொஞ்சம் சொதப்பல். தம்மாத்தூண்டு செக்ஸ். இப்படி ஒரு கிராமத்தில் ஆரம்பித்து, சம்பந்தப்பட்டவர்கள் சென்னைக்கு வந்து சேர்ந்ததும் சுறுசுறுப்பு. ஒரே ஒரு பெட்டியை வைத்துக் கொண்டு ஏகப்பட்ட ஹேர்பின் வளைவுகள். கிச்சுக்கிச்சு மூட்டுவதற்கென்றே ஒரு நகைச்சுவை நட்சத்திரப் பட்டாளம் ஆகவே —

மூச்! 'லாஜிக்' பற்றியெல்லாம் கேள்வி கேட்கக்கூடாது.

— சி. ஆர். கே.



முன் கதை

பரஞ்சோதி என்ற இளம் வாலிபன் காஞ்சி நகருக்கு நாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ் பயில்வதற்காக வருகிறான். வழியில் ஒரு புத்த பிக்ஷு அவனுக்கு அறிமுகமாகிறார். காஞ்சிக்கோட்டைக் கதவுகள் மூடப்பட்டிருந்த போதிலும் பிக்ஷுவின் உதவியுடன் நகருக்குள் நுழைகிறான். நாவுக்கரசர் மடத்தைத் தேடிப் போகையில் ஒரு பல்லக்கில் மகா சிற்பி ஆயனரும் அவரது மகள் நடனக் கலையரசி சிவகாமியும் வருவதைக் காண்கிறான். மதம் பிடித்த யானை ஒன்று விரைந்து வர, அதன் மீது வேலை எறிந்து ஆயனரையும் சிவகாமியையும் காப்பாற்றுகிறான். யானை திசை மாறிப் பரஞ்சோதியைத் துரத்திச் செல்கின்றது.

# சிவகாமியின் சபதம்

## மூன்றாம் அத்தியாயம்

## கடவுள் காப்பாற்றினார்!

மதங்கொண்ட யானையின் மீது வேலை எறிந்தால் அதனுடைய விளைவு என்னவாகும் என்பதை அந்த இளம் பிரயாணி நன்கு உணர்ந்திருந்தான். எனவே, யானை தன் பக்கம் திரும்பக் கண்டதும், பல்லக்கு இருந்த திசைக்கு எதிர்த் திசையில் வேகமாக ஓடத் தொடங்கினான். யானை தன்னுடைய பிரம்மாண்டமான தேகத்தை முழுதும் திருப்புவதற்குள்ளே அவன் வெகுதூரம் ஓடி விட்டான். ஓடியவண்ணமே திரும்பிப் பார்த்த போது, யானை விரட்டுக் கொண்டு தன்னை நோக்கி விரைந்து வருவதைக் கண்டான். உடனே அங்கே காணப்பட்ட ஒரு சந்தில் திரும்பி ஓடத் தொடங்கினான். சற்று நேரம் திரும்பிப் பார்க்காமல் ஓடிய பிறகு மறுபடியும் ஒரு விசாலமான பெரிய வீதியில் தான் வந்திருப்பதைக் கண்டான். தனக்கு எதிரே ஐந்தாறு யானைகள் மாவுத்தர்களால் ஏவப்பட்டு விரைவாக வந்து கொண்டிருப்பதைப் பார்த்துத் தெருவின் ஓரத்தில் ஒதுங்கினான். மதயானையைக் கட்டுக்கு உட்படுத்தி அழைத்துச் செல்வதற்காகவே இந்த யானைகள் போகின்றன என்பதை ஊகித்துணர்ந்ததும் ஓடுவதை நிறுத்தி மெதுவாக நடக்கலானான்.

பரஞ்சோதிக்கு அப்போதுதான் தன் தேகநிலை பற்றிய நினைவு வந்தது. அவனுடைய நெஞ்சு 'படபட' வென்று அடித்துக் கொண்டிருந்தது. உடம்பெல்லாம் வியர்வையினால் சொட்ட நனைந்து போயிருந்தது.

ஏற்கெனவே, நாளெல்லாம் வழி நடந்ததனால் பரஞ்சோதி களைத்துப் போயிருந்தான். இப்போது அதி வேகமாக ஓடி வந்ததனால் அவனுடைய களைப்பு மிகுதியாகியிருந்தது. கால்கள் தளர்ந்து தடுமாறின. உள்ளத்தில் ஏற்பட்ட, கிளர்ச்சியினாலும், பரபரப்பினாலும், தேகம் நடுங்கிற்று. சற்று உட்கார்ந்து இளைப்பாறாமல் மேலே நடக்க முடியாது என்று தோன்றியது. வீதி ஓரத்தில் காணப்பட்ட சுமைதாங்கியண்டை சென்று அதன் மேல் உட்கார்ந்தான்.

வானத்தில் பூரண சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. இளந் தென்றல் மெல்ல மெல்ல வந்து களைத்துப் போயிருந்த அவனுடைய தேகத்தின் மீது வீசி இளைப்பாற்றியது.

உடம்பின் களைப்பு நீங்க நீங்க உள்ளம் சிந்தனை செய்யத் தொடங்கியது. ''நாம் வந்த காரியம் என்ன? செய்த காரியம் என்ன?'' என்று எண்ணிய போது, பரஞ்சோதிக்கே வியப்பாயிருந்தது. அந்த மத யானையின் மேல் வேலை எறியும்படியாக அந்தச் சமயம் தனக்குத் தோன்றிய காரணம் என்ன? அதனிடம் சிக்கிக் கொண்டிருந்தால், தன்னுடைய கதி என்னவாகியிருக்கும்? — தன்னிடம் உயிரையே வைத்திருக்கும் தன் அருமை அன்னையை மறுபடியும் பார்க்க முடியாமலே போயிருக்குமல்லவா?

சிவிகையில் வீற்றிருந்த இளம் பெண்ணின் முகமும் பெரியவரின் முகமும் பரஞ்சோதியின் மனக்கண் முன்பு தோன்றின. ஆம்; மதயானையினால் அவர்களுக்கு ஆபத்து வராமலிருக்கும் பொருட்டே அந்தச் சமயம் அவன் வேலை எடுத்து வீசினான். அவர்கள் யாராயிருக்கலாம்? ஒருவேளை அரங்கேற்றம் தடைப்பட்டது குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்களே, — அந்தச் சிவகாமி அம்மைதானோ அந்த இளம் பெண்! பெரியவர் அவளுடைய தந்தை ஆயனராயிருக்குமோ?

இவ்விதம் சிந்தித்தவண்ணமாய்ப் பரஞ்சோதி, சுமைதாங்கியின் மேடை மீது சாய்ந்

தான். அவனை அறியாமல் அவனுடைய கண்ணிமைகள் மூடிக் கொண்டன. நித்திரா தேவி தன் மிருதுவான மந்திரக் கரங்களினால் அவனைத் தழுவலானாள்.

மின்னல் மின்னுகிற நேரத்தில் மத யானையின் மீது ஓர் இளம்பிள்ளை வேலை எறிந்ததையும், யானை திரும்பி அவனைத் துரத்திச் சென்றதையும், சிவிகையிலிருந்த பெரியவரும் இளம்பெண்ணும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அந்த வாலிபனின் தீரமும் துணிச்சலும் அவர்களுக்குப் பெரும் வியப்பை உண்டு பண்ணின.

அந்தப் பிள்ளைக்கு அபாயம் நேராமல் இருக்க வேண்டுமேயென்று அவர்களுடைய உள்ளங்கள் துடித்தன.

அவனுக்கு என்ன நேர்ந்தது என்று தெரிந்து கொள்ளும் ஆவலினால் சிவிகைக்குள்ளிருந்து பரபரப்புடன் வெளியே வந்தார்கள்.

அந்தச் சமயம் அவ் விசாலமான வீதி, ஜன சூனியமாகக் காணப்பட்டது. ஓர் ஈ காக்கை அங்கே கிடையாது.

பல்லக்கிலிருந்து இறங்கிய மனிதர் அந்த இளம் பெண்ணின் முதுகில் கையை வைத்து அணைத்துக் கொண்டு அன்பு கனிந்த குரலில், ''பயமாயிருக்கிறதா, சிவகாமி?'' என்று கேட்டார்.

''இல்லவே இல்லை, அப்பா! பயமில்லை!'' என்றாள் சிவகாமி.

பிறகு அவள், ''நல்ல சமயத்தில் அந்த வாலிபன் மட்டும் வந்து யானையைத் திருப்பியிராவிட்டால் நம்முடைய கதி என்னவாகியிருக்கும்?'' என்றாள்.

''பல்லக்கு சுக்குநூறாகியிருக்கும்!'' என்றார் தந்தை.

''ஐயோ!'' என்றாள் அந்த இளம் பெண்.

''அதற்காகத்தான் சிவிகையைக் கீழே வைத்து விட்டுச் சிவிகை தூக்கிகளை ஓட்டமெடுக்கச் சொன்னேன். நாமும் பக்கத்து வீட்டுக்குள் ஓடித் தப்பியிருக்கலாம். ஆனாலும் வந்த அபாயம் பெரிதுதான்!'' என்றார் பெரியவர்.

நாலா புறமும் சிதறி ஓடிய ஜனங்கள் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ஒவ்வொருவராகத் திரும்பி வர ஆரம்பித்தார்கள். வந்தவர்கள் எல்லாரும் அங்கு நிகழ்ந்தவைகளைப் பற்றி ஏக காலத்தில் பேச ஆரம்பிக்கவே, சற்றுமுன் நிசப்தம் குடிகொண்டிருந்த இடத்தில் 'கலகல' வென்ற பேச்சொலி எழுந்தது.

''ஆகா! ஆயனரும் அவர் மகளும் அல்லவா! நல்ல வேளையாய்ப் போயிற்று! கடவுள்தான் காப்பாற்றினார்!'' என்று ஜனங்கள் பலவாறாகப் பேசிக் கொண்டு நின்றார்கள்.

கடவுள் காப்பாற்றினார் என்றாலும், அவர் அந்த வீர வாலிபனுடைய உருவத்தில் வந்தல்லவா காப்பாற்றினார்! அந்தப் பிள்ளை யாராயிருக்கும்? அவனுடைய கதி என்னவாயிற்று? — இதைப் பற்றித்தான் ஆயனரும் அவருடைய மகளும் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த இளம்பிள்ளையைப் பற்றி அவர்களுக்குத் தகவல் தெரிவிக்கக்கூடியவர்கள் யாருமில்லை.

ஆயனர், யானை கடைசியாக நின்ற இடத்தின் அருகே சென்றார். அங்கே யானையின் காலில் மிதிபட்டு முறிந்து கிடந்த வேலைக் கையில் எடுத்துக் கொண்டார். இன்னும் சற்றுத் தூரத்தில் அவிழ்ந்து கிடந்த மூட்டையை அவர் கட்டி எடுத்துக் கொண்டு திரும்பிச் சிவிகையண்டை வந்தார். சிவகாமி அந்த முறிந்த வேலை வாங்கி வியப்புடன் நோக்கினாள்.

ஆயனர், ''சிவகாமி! இங்கே வீணாக நின்று கொண்டிருப்பதில் பயனில்லை. நாம் போகலாம்; எல்லா விவரங்களும் தானே நாளைக்குத் தெரிந்து விடுகிறது'' என்றார்.

தந்தையும் மகளும் சிவிகைக்குள் ஏற உத்தேசித்த சமயத்தில், சற்றுத் தூரத்தில் குதிரைகள் அதிவேகமாக வரும் சப்தம் கேட்டுத் தயங்கி நின்றார்கள்.

நிலா வெளிச்சத்தில், முன்னால் இரண்டு வெண் புரவிகள் பாய்ந்து வருவதும், பின்னால் ஐந்தாறு குதிரைகள் தொடர்ந்து வருவதும் தெரிந்தன. முன்னால் வந்த குதிரைகளில் இரண்டு கம்பீர புருஷர்கள் ஏறி வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து குதிரைகளின் மீது வேல் பிடித்த வீரர்கள் காணப்பட்டனர்.

குதிரைகள் சிவிகைக்குப் பக்கத்தில் வந்து நின்றதும் ஜனங்கள் பயபக்தியுடன் சிறிது விலகிக் கொண்டார்கள்.

''மகேந்திர மகா பல்லவர் வாழ்க!'' ''திரிபுவன சக்கரவர்த்தி வாழ்க!'' ''குணபர மகாராஜா வாழ்க!'' ''குமார சக்கரவர்த்தி மாமல்லர் வாழ்க!'' என்ற கோஷங்கள் நாற்



புறமும் எழுந்தன.

வெண் புரவிகளில் முன்னால் வந்தவர்கள் மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய ஏக புதல்வர் நரசிம்ம பல்லவருந்தான் என்பதை ஆயனரும், சிவகாமியும் உணர்ந்ததும் அவர்களுக்குப் பெரிதும் வியப்பு உண்டாயிற்று.

சிவகாமி ஆயனருக்குப் பின்னால் ஒதுங்கி நாணத்துடன் நின்றாள். அவளுடைய விசாலமான கரிய கண்கள் மகேந்திர சக்கரவர்த்திக்குப் பின்னால் குதிரை மீது

விற்றிருந்த குமார சக்கரவர்த்தியை நோக்கின.

மகேந்திர சக்கரவர்த்தி, "ஆயனரே! இது என்ன? நான் கேள்விப்பட்டது விபரீதமாக அல்லவா இருக்கிறது?" என்று சொல்லிக் கொண்டே குதிரை மீதிருந்து இறங்கினார்.

"ஏகாம்பரர் அருளால் அபாயம் ஒன்றும் நேரவில்லை, பிரபு!" என்றார் ஆயனர்.

"சிவகாமி ரொம்பவும் பயந்து போய் விட்டாளா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"சிவகாமி பயப்படவில்லை. இதையெல்லாம் அவள் ஏதோ வேடிக்கையென்று எண்ணிக் கொண்டிருக்கிறாள்!" என்று ஆயனர் கூறி, அன்பு நிறைந்த கண்களால் தமக்குப் பின்னால் அடக்கத்துடன் நின்ற சிவகாமியைப் பார்த்தார்.



அப்போது சக்கரவர்த்தியும் அவளைப் பரிவுடன் நோக்கி, ''சிவகாமி! ஏன் தலை குனிந்து கொண்டிருக்கிறாய்? அரங்கேற்றத்தின் போது நடுவில் போய் விட்டேனே என்று என் பேரில் மனஸ்தாபமா?'' என்றார்.

சிவகாமியின் முகத்தில் நாணத்துடன் கூடிய புன்னகை மலர்ந்தது. அவள் மௌனமாயிருந்தாள்.

அப்போது ஆயனர், ''பல்லவேந்திரா! சிவகாமிக்கு அவ்வளவு தெரியாதா? ஏதோ மிகவும் முக்கியமான காரியமாதலால்தான் தாங்கள் நடுவில் எழுந்து போயிருக்க வேண்டும்...'' என்றார்.

''ஆமாம், ஆயனரே! ரொம்பவும் முக்கியமான காரியந்தான். எல்லாம் பிறகு விவரமாகச் சொல்லுகிறேன். மந்திராலோசனை முடிந்து வெளியில் வந்ததும் உங்களைப் பற்றி விசாரித்தேன். நீங்கள் புறப்பட்டு விட்டதாகத் தெரிந்தது. ஏன் இவ்வளவு அவசரமாகக் கிளம்பினீர்கள்?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

''இராத்திரி வீடு போய்ச் சேர்ந்தால் தானே காலையில் என் வேலையைத் தொடங்கலாம்? ஒருநாள் என்றால், ஒரு நாள் வீணாகப் போக வேண்டாமென்றுதான் இன்றே புறப்பட்டேன், பிரபு!''

''ஆமாம்; உமது தெய்விகச் சிற்பக் கலையை விட்டுவிட்டு உம்மால் ஒருநாள் கூட இருக்க முடியாதுதான். இப்போதும் இராத்திரியே போவதாகத்தான் உத்தேசமா?''

''ஆம், பல்லவேந்திரா! பட்டப் பகலைப் போல் நிலா எரிகிறது. இரவு போய் விடுவதே சௌகரியம்.''

''இந்த வெண்ணிலாவைப் பார்த்தால் எனக்குக் கூட உம்முடன் வரவேண்டுமென்று தோன்றுகிறது. ஆனால், அது முடியாத காரியம். நாளை அல்லது மறுநாள் வருகிறேன்'' என்று கூறிச் சக்கரவர்த்தி திரும்பிப் பார்த்தார்.

அப்போது சக்கரவர்த்திக்குப் பின்னால் இன்னொரு வெண்புரவியின் மேலிருந்த நரசிம்மவர்மர் வெகு லாகவத்துடன் குதிரை மேலிருந்து கீழே குதித்துச் சக்கரவர்த்தியின் பக்கத்தில் வந்து, ''அப்பா! யானை மீது வேல் எறிந்த வாலிபனைப் பற்றி விசாரிக்கவில்லையே?'' என்று கூறி விட்டு, ஆயனரைப் பார்த்து, ''அந்த வாலிபன் யார்? அவன் எங்கே சென்றான்? உங்களுக்கு ஏதாவது தெரியுமா?'' என்று கேட்டார்.

''அதுதான் தெரியவில்லை. வேலை எறிந்ததும் அவன் மின்னலைப் போல் மறைந்து விட்டான். ஆனால், அப்படி மறைந்ததனாலேயே உயிர் தப்பிப் பிழைத்தான். தேசாந்தரம் வந்த பிள்ளையாகத் தோன்றியது'' என்றார் ஆயனர்.

குமார சக்கரவர்த்தி, ஆயனருடன் பேசிக் கொண்டிருக்கையில் அவருடைய கண்கள் மட்டும் ஆயனருக்குப் பின்னால் இருந்த சிவகாமியின் மீது நின்றன.

நரசிம்மவர்மர் சற்றுத் தூரத்தில் குதிரை மீதிருந்த போது அவரை ஏறிட்டுத் தீவிர நோக்குடன் பார்த்த சிவகாமியோ இப்போது அவர் பக்கமே பார்க்காமல் பூமியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். தரையில் அவள் அருகில், சற்று முன்னால் அவள் கையிலிருந்து நழுவிய முறிந்த வேல் கிடந்தது.

அதைப் பார்த்த நரசிம்மவர்மர், ''சிவகாமி! இது என்ன?'' என்று கேட்டுக் கொண்டே அவள் அருகில் சென்றார். சிவகாமி சிறிது பின்வாங்கி, முறிந்த வேலைத் தரையிலிருந்து எடுத்து அவர் பக்கம் நீட்டினாள். அதை நரசிம்மவர்மர் வாங்கிக் கொண்ட போது, அவருடைய கை விரல்கள் சிவகாமியின் விரல்களைத் தீண்டியிருக்க வேண்டும். தேள் கொட்டியவர்களைப் போல் அவர்கள் அவசரமாக விலகிக் கொண்டதிலிருந்து இதை ஊகிக்கக் கூடியதாயிருந்தது.

நரசிம்மவர்மர் தம் தேகத்தில் ஏற்பட்ட படபடப்பை ஒருவாறு சமாளித்து அடக்கிக் கொண்டு, ஆயனரைப் பார்த்து, ''உங்களை மத யானையின் கோபத்திலிருந்து காப்பாற்றியது இந்த வேல்தானா, ஆயனரே?'' என்று கேட்டார்.

''ஆமாம், பல்லவ குமாரா!'' என்று ஆயனர் மேலும் ஏதோ சொல்லுவதற்குள் மாமல்லர் தந்தையைப் பார்த்து, ''அப்பா! இந்த வேலுக்கு உடையவனைக் கட்டாயம் கண்டு பிடிக்க வேண்டும். அவன் நல்ல சமயத்தில் இத்தகைய வீரச் செயலைப் புரிந்திராவிட்டால், பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சிற்பியை அல்லவா இந்நேரம் இழந்திருப்போம்?'' என்றார்.

அதற்குச் சக்கரவர்த்தி, ''மகா சிற்பியை மட்டும்தானா? பல்லவ ராஜ்யத்தின் தலை சிறந்த கலைவாணியையும் இழந்திருப்போம்! அந்த வீரனைக் கண்டுபிடிக்க வேண்டியது அவசியந்தான். இவர்கள் இப்போது புறப்பட்டுச் செல்லட்டும். ஏற்கெனவே நேரம் அதிகமாகி விட்டது!'' என்று சொல்லி விட்டுச் சிவகாமியைப் பார்த்து, ''குழந்தாய்! உன்னுடைய ஆட்டம் இன்று அற்புதமாயிருந்தது. முழுமையும் பார்க்கத்தான் முடியாமல் போயிற்று'' என்றார்.

பின்னர் அவள் தந்தையை நோக்கி,

"ஆயனரே! உம்முடன் பேச வேண்டிய விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. சீக்கிரத்தில் மாமல்லபுரம் வருகிறேன். இப்போது ஜாக்கிரதையாய்ப் போய்ச் சேருங்கள்" என்று சொன்னார்.

அங்கே தாம் நிற்கும் வரையில் ஆயனரும் அவர் மகளும் பல்லக்கில் ஏறமாட்டார்கள் என்பதை அறிந்த சக்கரவர்த்தி விரைந்து சென்று குதிரையின் மேல் ஏறினார். நரசிம்மவர்மரும் தம் குதிரை மீது ஏறிக்கொண்டார்.

குதிரைகள் புறப்படு முன் மகேந்திர பல்லவர் தமக்குப் பின்னால் நின்ற வீரர்களில் ஒருவனைச் சைகையினால் கூப்பிட்டு, "அயலூரிலிருந்து புதிதாக வந்த இளைஞன் யாராயிருந்தாலும் இன்றிரவு அவனைப் பிடித்து வைத்திருந்து நாளைக்கு அரண்மனைக்கு அழைத்து வரவேண்டும்; நகர்க் காப்புத் தலைவனுக்கு இந்தக் கட்டளையை உடனே தெரியப்படுத்து!" என்று ஆக்ஞாபித்தார்.

சக்கரவர்த்தியும் குமாரரும் அங்கிருந்து போனதும், ஆயனரும் சிவகாமியும் தங்கள் சிவிகையில் அமர்ந்தார்கள். காவலர் புடைசூழ, சிவிகை காஞ்சிக் கோட்டையின் கீழ் வாசலை நோக்கிச் சென்றது.

## நான்காம் அத்தியாயம்

# துர்ச்சகுனம்!

வீதி ஓரத்திலிருந்த சுமைதாங்கியின் மீது பரஞ்சோதி சாய்ந்து கண்ணை மூடிக் கால்நாழிகை கூட இராது. ஏதோ பேச்சுக் குரலைக் கேட்டுத் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு கண்விழித்தான். தெருவில் யாரோ இவ்விதம் பேசிக் கொண்டு போனார்கள்:

"கோயில் யானைக்கு மதம் பிடித்தால் துர்ச்சகுனம் என்று சொல்லுகிறார்களே?"

"ஆமாம்; நாட்டுக்கு ஏதோ பெரிய விபரீதம் வரப் போகிறது!"

"யானைக்கு எப்படி மதம் பிடித்ததாம்?"

"யாருக்குத் தெரியும்? யாரோ அசலூரான் ஒருவன் யானையின் மேல் வேலை வீசி எறிந்தானாம். அதனால் யானைக்கு வெறிபிடித்து விட்டது என்று சொல்லுகிறார்கள்."

"ஆயனச் சிற்பியும் அவருடைய மகளும் பிழைத்தது புனர்ஜன்மம் என்கிறார்களே?"

"அப்படித்தான்; அரங்கேற்றம் நடுவில் நின்றது போதாதென்று இந்த ஆபத்து வேறே அவர்களுக்கு நேர்ந்தது."

அதற்கு மேல் பரஞ்சோதிக்கு அவர்கள் பேசியது கேட்கவில்லை. "வேலை எறிந்ததனால் யானைக்கு வெறி பிடித்து விட்டதாம்!" என்னும் பேச்சுக் காதில் விழுந்ததும், பரஞ்சோதியின் உள்ளம் திடுக்கிட்டது. அப்போது அவனுக்கு இன்னொரு விஷயமும் ஞாபகம் வந்தது. அவன் கொண்டு வந்திருந்த மூட்டையை நடுத் தெருவிலேயே போட்டு விட்டு அவன் ஓடி வந்து விட்டான். நாவுக்கரசருக்கும் ஆயனச் சிற்பிக்கும் அவன் கொண்டு வந்திருந்த ஓலைகள் அந்த மூட்டையில் இருந்தன. இன்னும் அவனுடைய துணி மணிகளும், அவன் கொண்டு வந்திருந்த சொற்பப் பணமும் மூட்டைக்குள்ளேதான் இருந்தன. அதை அவசியம் கண்டுபிடித்தாக வேண்டும். போட்ட இடத்திலேயே மூட்டை கிடைக்குமா? திக்குத் திசை புரியாத இந்தப் பெரிய நகரத்தில் அந்த இடத்தை மறுபடியும் கண்டுபிடிப்பது எப்படி?

பரஞ்சோதி சுமைதாங்கியிலிருந்து இறங்கி, தான் ஓடி வந்த வழி எதுவாயிருக்குமென்று ஒருவாறு ஊகித்துக் கொண்டு, அந்தத் திசையை நோக்கி நடக்கத் தொடங்கினான். இதற்குள் வீதிகளில் ஜன நடமாட்டம் வெகுவாகக் குறைந்து போயிருந்தது. வீட்டுக் கதவுகளையெல்லாம் சாத்தியாகி விட்டது. வீதி விளக்குகளை அணைத்து விட்டார்கள். நல்ல வேளையாகப் பூரண சந்திரன் பால் போன்ற வெண்ணிலாவைப் பொழிந்து கொண்டிருந்தான். நிலா வெளிச்சத்தில் நாற்புறமும் கூர்மையாகப் பார்த்துக் கொண்டு பரஞ்சோதி வெகுநேரம் நடந்தான். எவ்வளவு நடந்தும், யானையைச் சந்தித்த இடத்தை அவனால் கண்டுபிடிக்க முடியவில்லை. மூட்டையையும் அவன் எங்கும் காணவில்லை.

நேரமாக ஆக, வீதிகளில் நிசப்தம் குடி கொண்டது. உச்சி வானத்தில் சந்திரனைப் பார்த்து அர்த்தராத்திரியாகி விட்டது என்பதைப் பரஞ்சோதி தெரிந்து கொண்டான். கால்கள் இனி நடக்க முடியாதபடி சோர்ந்து போயின. உடம்பை எங்கேயாவது கீழே போட்டால் போதும் என்று அவனுக்கு ஆகி விட்டது. இனிமேல் மூட்டையைத் தேடுவதில் பயனில்லை. நாவுக்கரசர் மடத்துக்கு எப்படியாவது போய்ச் சேர்ந்தால் போதும்.

ஆனால், எப்படிப் போவது? வழி கேட்

பதற்குக் கூட வீதிகளில் யாரையும் காணோம். லட்சக்கணக்கான ஜனங்கள் வாழ்ந்த அந்தப் பெரிய நகரத்தில் தான் மட்டும் தன்னந்தனியாக அலைவதை நினைத்தபோது பரஞ்சோதிக்கு எப்படியோ இருந்தது. இராத்திரியெல்லாம் இப்படியே அலைந்து கொண்டிருக்க வேண்டியது தானோ? ஆயிரக்கணக்கான மாளிகைகளும், மண்டபங்களும், வீடுகளும் நிறைந்துள்ள இந்த நகரில் தனக்கு இரவில் தங்குவதற்கு இடம் கிடையாதா? — நல்ல வேளையாக இதோ யாரோ வருகிறார்கள் போலிருக்கிறது. பேச்சுக் குரல் கேட்கிறது. அவர்களை விசாரித்துப் பார்க்கலாம்.

ஒரு வீதியின் முடுக்கில் இரண்டு பேர் பேசிக் கொண்டு வந்தார்கள். அவர்களைப் பார்த்தால் நகர்க் காவலர்கள் என்று தோன்றியது. பரஞ்சோதியைப் பார்த்ததும் அவர்களே நின்றார்கள்.

''யாரப்பா நீ? நடு ராத்திரியில் எங்கே கிளம்பினாய்?'' என்று அவர்களில் ஒருவன் கேட்டான்.

''நான் அயலூர், ஐயா...'' என்று பரஞ்சோதி சொல்ல ஆரம்பிப்பதற்குள், முதலில் பேசியவன், ''அயலூர் என்றால், எந்த ஊர்?'' என்றான்.

''சோழ தேசம்....''

''ஓகோ! உறையூரா?''

''இல்லை, ஐயா! கீழைச் சோழ நாட்டில் செங்காட்டங்குடி கிராமம். இன்று மாலை தான் காஞ்சிக்கு வந்து சேர்ந்தேன்.''

''அப்படியா? இங்கு எதற்கு வந்தாய்?''

''நாவுக்கரசர் மடத்தில் தமிழ் பயில்வதற்காக வந்தேன்!''

''அப்படியானால், நள்ளிரவில் தெரு வீதியில் ஏன் அலைகிறாய்?''

''மடம் இருக்குமிடம் தெரியவில்லை. சாயங்காலத்திலிருந்து தேடிக் கொண்டிருக்கிறேன்.''

அந்தக் காவலர்கள் இருவரும் இலேசாகச் சிரித்த சிரிப்பில் பரிகாசம் தொனித்தது. அவர்களில் ஒருவன், ''நாவுக்கரசர் மடத்துக்கு நீ கட்டாயம் போக வேண்டுமா?'' என்று கேட்டான்.

''ஆம், ஐயா!''

''நாங்கள் அந்தப் பக்கந்தான் போகிறோம். நீ வந்தால் அழைத்துக் கொண்டு போய் விடுகிறோம்.''

பரஞ்சோதி காவலர்களுக்கு வந்தனம் சொல்லிவிட்டு அவர்களைப் பின்தொடர்ந்து சென்றான். சற்று நேரத்துக்கெல்லாம் அவர்கள் உயரமான மதில் சுவர்களையுடைய ஒரு கட்டடத்தின் வாசலில் வந்து நின்றார்கள்.

''இதுதான் மடமா?'' என்று கேட்டான் பரஞ்சோதி.

''ஆமாம்; பார்த்தால் இது மடமாகத் தோன்றவில்லையா?''

உண்மையில் பரஞ்சோதிக்கு அது மடமாகத் தோன்றவில்லை. அருகில் கோயில் எதையும் காணவில்லை. கட்டடத்தின் உயரமான சுவர்களும், வாசற் கதவில் பூட்டியிருந்த பெரிய பூட்டும் அவனுக்கு இன்னதென்று தெரியாத சந்தேகத்தை உண்டாக்கின.

அவனை அழைத்துப் போனவர்களில் ஒருவன் வாசற் கதவண்டை சென்று அங்கேயிருந்த காவலாளியிடம் ஏதோ சொன்னான்.

உடனே பூட்டுத் திறக்கப்பட்டது; கதவும் திறந்தது.

''வா தம்பி!''

நெஞ்சு 'திக் திக்'கென்று அடித்துக் கொள்ள, பரஞ்சோதி வாசற்படியைத் தாண்டி உள்ளே சென்றான்.

இருபுறமும் உயரமான சுவர் எழுப்பிய குறுகிய சந்தின் வழியாக அவனை அழைத்துப் போனார்கள். ஓரிடத்தில் நின்றார்கள். அங்கிருந்த அறையின் கதவு திறக்கப்பட்டது.

''இங்கே படுத்திரு. மடத்தில் எல்லோரும் தூங்குகிறார்கள். பொழுது விடிந்து பார்த்துக் கொள்ளலாம்'' என்றான் ஒருவன்.

பரஞ்சோதி அந்த இருட்டறைக்குள் எட்டிப் பார்த்தான். கொஞ்சம் வைக்கோலும் ஒரு கோரைப் பாயும் கிடந்தன. ஒரு மூலையில் சட்டியில் தண்ணீர் வைத்திருந்தது.

திரும்பித் தன்னுடன் வந்த காவலர்களைப் பார்த்து, ''இது மடந்தானா?'' என்று கேட்டான்.

''ஆமாம், தம்பி! உனக்கு என்ன சந்தேகம்?'' என்றான் காவலர்களில் ஒருவன்.

''இங்கிருக்க விருப்பம் இல்லாவிட்டால் வெளியே போய் விடு!'' என்றான் இன்னொருவன்.

பரஞ்சோதிக்கு இருந்த களைப்பில் எப்படியாவது இராத்திரி படுத்துத் தூங்க இடம் கிடைத்தால் போதும் என்று இருந்தது.

''இல்லை. இங்கேயே நான் படுத்திருக்கிறேன்'' என்று சொல்லி விட்டு அறைக்குள் நுழைந்தான்.

அப்போது அவனை அழைத்து வந்தவர்களில் ஒருவன், ''தம்பி! இது மடந்தான். ஆனால், நாவுக்கரசர் மடமல்ல. மன்னர் மன்னரான மகேந்திர சக்கரவர்த்தியின் மடம்!'' என்று சொல்லிக் கொண்டே கதவைச் சாத்தினான்.

அடுத்த கணம் அறைக் கதவைப் பூட்டும் சப்தம் கேட்டது!

(தொடரும்)

# உங்களுடைய குழந்தையின் உணவுடன் அநேகமாக தண்ணீர் கலந்துதான் கொடுக்கிறீர்கள். அது பாதுகாப்பாய் இருப்பதற்கு நீங்கள் உறுதிசெய்து கொள்ள வேண்டாமா?

பராமரிப்பிற்கும், போஷாக்கிற்கும் உங்கள் குழந்தை உங்களைத்தான் நம்பி இருக்கிறது. குழந்தையின் ஆரோக்கியத்திற்கு பாதுகாப்பான குடிநீர் மிகவும் அவசியம் என்பதை அறிந்துள்ள நீங்கள், எவ்வளவு வேலை மும்முரத்துடன் இருப்பினும், குடிநீர் சுத்தமாக இருக்கிறதா என்று நிச்சயம் செய்து கொள்கிறீர்கள். அதற்காக தினமும் தண்ணீரை வடிகட்டி, கொதிக்க வைத்து, குளிர வைக்கிறீர்கள்.

அவ்வாறு தண்ணீரை குளிர்விக்கும் போதும், கையாளும் போதும், பிடித்து வைக்கும் போதும், மீண்டும் தண்ணீரில் மாசு கலக்கும் அபாயத்தை முற்றிலும் உங்களால் தவிர்க்க முடியாது.



உங்களுடைய வீட்டிற்கு வந்து இலவச செய்முறை விளக்கமளிக்க எழுதுங்கள்:

**யுரேகா ஃபோர்ப்ஸ் லிமிடெட்.**
தபால் பெட்டி எண் 936, பம்பாய்-400 001.
இன்றே உங்களுக்கு அருகாமையிலுள்ள
அக்குவாகார்டு அலுவலகத்துடன் தொடர்பு கொள்க.

சுத்தமான, பாதுகாப்பான உடனே குடிக்கத் தயாரான தண்ணீரை சுவிட்சை தட்டிய உடனே வழங்குவதற்கு ஏற்ற முறையில் உருவாக்கப்பட்டுள்ளது — அக்குவாகார்டு!

இனி தண்ணீரைக் கொதிக்க வைத்தல், குளிர்வித்தல் போன்ற தொல்லைகள் இல்லை. நீங்கள் குழந்தையின் ஆகாரத்தை அக்குவாகார்டின் தண்ணீரில் நேரடியாக தயாரிக்கலாம். அது பகலாயினும் இரவாயினும் சரி.

உங்களுடைய குடும்பத்தினருக்கு அக்குவாகார்டு தண்ணீர் வழங்கும் நம்பிக்கையை அறியுங்கள்.

அகமதாபாத்: 446937, பெங்களூர்: 211735, போபால்: 37781, பம்பாய்: 2047870, கல்கத்தா: 247799, கொச்சி: 352734, கோவை: 43180, டில்லி: 6416143.
ஹைதராபாத்: 8257001, கோவா: 6867, கௌஹாத்தி: 73291, ஜலந்தர்: 44124, ஜெய்ப்பூர்: 73205, லக்னோ: 74470, பூனா: 26877, சென்னை: 8250854.
மதுரை: 37445, புனே: 667968, திருச்சூர்: 54274, திருச்சி: 41567, திருவனந்தபுரம்: 79570, விஜயவாடா: 475964, விசாகப்பட்டினம்: 53009

## அக்குவாகார்டு சுத்தமான, பாதுகாப்பான குடிநீருக்கு.

ஆன்-லைன் வாட்டர் பில்டர்-கம்-ப்யூரிஃபையர்.

# முதல் விருப்பம் லிம்கா
# தாகத்தின் விருப்பம் லிம்கா



## தாகத்தின் விருப்பம்

லிம்காவில் அடங்கியுள்ள ஐசோடானிக்
உப்பு, உங்கள் தாகத்தை தணிக்கிறது.



## சுவை நாடுவோரின் விருப்பம்

லிம்காவின் இனிப்பும் உப்பும் கலந்த இணையற்ற
சுவை அனைவரின் உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும்



## கொட்டமடிப்போரின் விருப்பம்

உல்லாசமாய் கொட்டமடிக்கும் நேரங்களில்
லிம்கா, வாழ்விற்கு மேலும் சுவை கூட்டுகிறது



## பாதுகாப்பு நாடுவோரின் விருப்பம்

லிம்கா கிருமிநீக்கம் செய்யப்பட்ட பானமாகையால்,
பயணிகளுக்கு முற்றிலும் பாதுகாப்பானது.




CONTAINS ADDED FLAVOUR. CONTAINS NO FRUIT JUICE / PULP

® THE REGISTERED TRADEMARK OF PARLE (EXPORTS) LTD., BOMBAY.

RADEUS/PE/L/10-90-TAM-R




விமான நிலையத்தின் வழவழப்பான தரைகளில் ட்ராலியைத் தள்ளிக் கொண்டு, கஸ்டம்ஸ், இமிக்ரேஷன் என ஒவ்வொரு சம்பிரதாயத்தையும் முடித்து விட்டு ராம்கி வெளிவந்த போது, குவைத் வெயிலின் உக்கிரத்தின் முதல் தாக்கத்தை உணர்ந்தான்.

புது இடம். வினோதமான சூழ்நிலை. அடிவயிற்றில் மெல்லப் பிசைந்தது.

இந்தியாவிலிருந்து கிளம்பும் கடைசி நிமிஷம் வரை குழப்பம், அலைச்சல், நிச்சயமின்மை. ஒரு முன்னோடியான பொதுத் துறையில் பத்து வருடம் பழம் தின்று, கொட்டை போட்டு, சட்டென்று அதை வெட்டிக் கொண்டு வருவது சுலபமல்ல. இது சரியான முடிவுதானா? இன்னும் ஒரு வருடம் தள்ளியிருந்தால் ஸீனியர் மானேஜர் ஆகியிருப்பான். இப்போதுதான் எம். டி. சூரியின் நேரடிப் பார்வை படும் இடத்திற்கு மாற்றலாகி இருந்தான். ப்ளையர் ப்ரமோஷன் கிடைக்கக் கூட வாய்ப்பு இருக்கிறது.

# தமிழுக்கும் அமுதென்று பேர்

ஆனால், ஜெனரல் மானேஜராக ஆனாலுமே கூட, அதை விட நான்கு மடங்கு சம்பளம் கொடுக்கிறான் குவைத்தில். கார், சகல சௌகர்யங்களுடன் கூடிய வீடு. இந்தியாவிலேயே இருந்தால் ஜன்மத்துக்கும் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது.

இருந்தாலும்....

"ஹலோ... ஹூ ஆர் சூப்பர்மேன் ராம் கிஷ்ன்...?" — அந்த ஆஜானுபாகுவான நபரின் அடித் தொண்டைக் குரல் அவனைத் தடுத்தது.

முதலில் அவன் சொன்னது தெளிவாகப் புரியா விட்டாலும், "யெஸ், யெஸ். ஐ'ம் சுப்ரமணியம் ராமகிருஷ்ணன். நியூ எம்ப்ளாயி ஆஃப் ஆயில் கம்பெனி..."

தன் பெயர் அத்னான் என்றும், அவன் சேரப் போகும் கம்பெனியின் பொதுத் தொடர்பு ஊழியன் என்றும் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான்.

"உங்கள் இந்தியப் பெயர்கள் ரொம்ப நீளம். உன் பெயரே வாயில் நுழைய மாட்டேங்குது..."

"யூ கேன் கால் மீ ராம்கி."

அவ்வளவு சொகுசான படகு போன்ற காருக்குள் அவன் இதுவரை நுழைந்ததில்லை.

வெகு ஜாக்ரதையாகக் கதவைச் சாத்தியதால், அது சரியாக மூடாமல் காருக்குள் ஏதோ ஙொய் ஙொய் என்று ஙளையிட அத்னான் ஆயாசமானான்.

"கமான் மை ஃப்ரண்ட்... ஜோராகச் சாத்து. கம்பெனி கார்தான். ஏன் சாதாரண விஷயத்திற்குக் கூட இந்தியர்கள் பயப்படுகிறார்கள் என்பது எனக்குப் புரியவே மாட்டேங்குது. எங்க லெபனான்லே பிறக்கும்போதே குழந்தைகள் துப்பாக்கியும் கையுமாகத்தான்..."

சாலைகளின் அகலத்திலும், விரையும் நவீன வாகனங்களின் வேகத்திலும் ராம்கி பிரமித்துப் போயிருந்தான். வெளியில் மருந்துக்குக் கூட மனித நடமாட்டமில்லை. மேம்பாலங்கள், நடுப்பாலங்கள், கீழ்ப் பாலங்கள் என சகட்டுமேனிக்குக் கட்டிப் போட்டிருந்தார்கள். சாலைக் குறியீடுகள் கூட நேற்றுத்தான் பெயிண்ட் அடித்தாற் போல பளிச்சென்றிருந்தன. ஒரே ஒரு மவுண்ட் ரோடைத் தலையில் வைத்துக் கொண்டு, கூத்தாடும் சென்னையை நினைத்து ஒரு கணம் ஏக்கமாக இருந்தது.

"ஹௌ இஸ் காஷ்மீர்...?"

"கெட்டிங் பெட்டர்..."

"நேற்றுக் கூட முப்பத்திரண்டு முஸ்லீம்களைக் கொன்றிருக்கிறீர்கள். நீ ஒரு கிறிஸ்துவனா...?"

ஜெயபிரபா

''நான் ஓர் இந்தியன்..''

''கமான் மை ஃப்ரண்ட். ஸ்டாப் தட் க்ராப். தைரியமாகச் சொல். ஹிண்டு?''

ராம்கி பேச்சை எப்படி மாற்றுவது என்று யோசிக்கையில், அத்னான் இந்தியச் சமுதாய, அரசியல் நிலைக்கு இந்தக் கணமே தீர்வு கண்டுவிட வேண்டும் போலத் தொடர்ந்தான்.

''ஒன்று கேள்விப்பட்டேன். உங்கள் மதத்தில், ஒரு பெண் ஐந்து பேரைக் கல்யாணம் பண்ணிக் கொண்டாளாமே: அது உண்மையா...?''

''அதெல்லாம் இதிகாசம்.. எத்தனையோ ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னால் நடந்ததாகச் சொல்லப்படும்...''

நல்ல வேளையாக, அவன் அடுத்த ஒரு வாரத்துக்குத் தாற்காலிகமாகத் தங்க வேண்டிய ஹோட்டல் வந்தது.

லாபியிலும், ரிஸப்ஷனிலும் பளபளவென்று அரபிப் பெண்களும், ஆண்களும் கிசுகிசுத்துக் கொண்டிருக்க, சாரை சாரையாக வண்ண விளக்குகள் அநாவசியமாக எரிந்து கொண்டிருந்தன. ஒரு சுற்றுப் பார்வையில் ஆங்காங்கே இந்திய முகங்களைக் காண முடிந்தது. ஓர் ஓரமாக, ஏற்கெனவே சுத்தமாயிருந்த பகுதிகளைச் சுத்தப்படுத்திக் கொண்டும், கண்களால் பேசிக் கொண்டும்.

''ஓகே. இன்றைக்கு ஓய்வெடு. நாளைக் காலை சரியாக எட்டு மணிக்கு வந்து உன்னைப் பிக் அப் செய்வேன். கீழே லாபிக்கு வந்து விடு...'' என்று அவசரமாக அத்னான் வெளியேறினான்.

தனித்து விடப்பட்ட அறையில் ராம்கி இன்னும் தனியனாகிப் போனான். நேற்றிரவு பிரியப் போகும் தாபத்தில் மனைவி கொடுத்த முத்தங்களின் ஈரம் இன்னும் இருந்தது. அவன் மேல் கால் போட்டுக் கொண்டு தூங்கின குழந்தையின் பாரம் இன்னமும் அழுத்தியது. முதலில் குழந்தையையும் மனைவியையும் இங்கு அழைத்து வர விசாவுக்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

அடுத்த இரண்டு வாரங்கள் மிக மெதுவாக ஊர்ந்தன. பாஷை புரியாமல் அலைக்கழித்தான். மெடிக்கல் டெஸ்ட், ஃபிங்கர் ப்ரிண்ட், அது, இது எனத் தொடர் சங்கிலியாய்க் காரியங்கள். சந்தித்தவர்களில் பாதிப் பேர் இவன் பெயரின் நீளம், கடினம் பற்றிக் குறைப்பட்டுக் கொண்டார்கள். சொற்பமாக இருந்த இந்திய ஊழியர்கள், தூரத்திலிருந்து சன்னமாகச் சிரித்து ஒதுங்கினார்கள். சிலோனிலிருந்து வந்திருந்த பொடியன், புரிந்து கொள்ளச் சிரமமாயிருந்த தமிழில் பேசி, அவ்வப்போது ம. அரபிக் காப்பி எனத் தாராளமாக உபசரித்தான்.

''ஹாய், ஆர் யூ மிஸ்டர் ராம்கி? என் பெயர் சார்லி...'' புயல் போல உள்ளே வந்தவரின் உச்சரிப்பில் மலையாள வாடை அடித்தது.



''ஓ! உங்களைச் சந்தித்ததிலே ரொம்பச் சந்தோஷம்...''

''இந்தியாவிலே எந்தக் கம்பெனி? பி.எச்.இ.எல்..?''

ராம்கி சொன்ன பதிலைச் சார்லி சரியாகக் காதில் வாங்கிக் கொண்டாரா எனத் தெரியவில்லை.

''எங்கே, உங்க காண்ட்ராக்டைக் காமிங்க பார்க்கலாம்..'' என்று சுவாதீனமாக அவன் கையிலிருந்து ஃபைலைப் பிடுங்கிக் கண்களாலேயே காப்பி எடுத்தார்.

''ஓ! ட்வெல்த் க்ரேட் கொடுத்திருக்கிறானா?'' — குரலில் மெலிதான ஏமாற்றம் தெரிந்தது. ''அப்ப, கம்பெனி கார் கிடைக்கும்....''

''சார், நீங்க எந்த டிபார்ட்மெண்ட், என்ன க்ரேட்...?'' என்று ராம்கி கேட்டு முடிப்பதற்குள், அந்த அறை வாசலில் அரவம் கேட்க, சார்லி மாயமாக மறைந்து போனார்.

வந்த ஐரோப்பியர் அவனைக் கரம் குலுக்கி, ''என்னை ஞாபகம் இருக்கா? நான் தான் உன்னை, அந்த பாம்பே ஷெராட்டனில் இண்டர்வ்யூ செய்தது. ஐ'ம் ரே ஃபாக்ஸ்லி...''

ராம்கிக்கு நினைவு வந்தாற் போலிருந்தது.

''ஸோ, வெல்கம் டு குவைட். இன்னும் இரண்டு, மூன்று நாட்களுக்குள் எல்லாச் சம்பிரதாயங்களும் முடிந்து விடும். உங்க எம்ப்ளாய்மெண்ட் காண்ட்ராக்ட்லே கையெழுத்துப் போட்ட மறு நிமிடமே, நீங்க டிபார்ட்மெண்டுக்கு வந்து விடலாம். நிறைய வேலைகள் காத்துக்கிட்டிருக்கு. பை தி வே, உங்க உடனடித் தேவைக்கு அட்வான்ஸ் கொடுத்தார்களா?''

சக்திமிக்க டினார் நோட்டுக்களைத் தொடுவதற்கே பாக்கியம் செய்திருக்க வேண்டும். கிட்டத்தட்ட இந்தியாவில் இவனுடைய இரண்டு மாதச் சம்பளத்தை மூன்று நாள் கைச் செலவுக்கு வைத்துக்



கொள் என்றார்கள். முதலில் அத்திம்பேரிடம் வாங்கியிருந்த கடனைத் திருப்ப வேண்டும்.

புது இடத்தின் வாசனையும், வாகனங்களின் வேகமும், வெறிச்சென்றிருந்த அமைதியும் கொஞ்சம் கொஞ்சம் பழக்கமாகி விட்டிருந்தன. இரவு படுக்கையில் மனைவியும் குழந்தையும் கனவில் வந்து படுத்தினார்கள்.

''அப்பா, நீ எங்களை மறந்துடுவே?''

''சே! சே! என் ப்ரீதிக் குட்டியை ஒவ்வொரு நிமிஷமும் நினைச்சிண்டே இருப்பேன்...''

''காட் பிராமிஸ்?''

''ப்ராமிஸ்.''

''உங்கப்பா அங்கே போய் அமெரிக்கன் கார் ட்ரைவ் பண்ணப் போறார்டி...''

''நிஜமாவா டாடீ?''

''ஆமாம்மா. நீயும், உங்கம்மாவும் குவைத்துக்கு வரும் போது நான் ஏர் போர்ட்ல வந்து பிக் அப் பண்ணிப்பேன். ராணி மாதிரி உன்னை உட்கார வைச்சு அழைச்சிண்டு போவேன். அந்தக் காருக்குள்ளே ஏஸி இருக்கும். காஸட் ப்ளேயர் இருக்கும்...''

ஏர்—போர்ட்டில் கிளம்பும் போது விசும்பலுக்கிடையே குழந்தை ஒரு காஸட் தந்தாள்.

''டாடி. இதிலே நான் உனக்காக ஒரு பாட்டு ரிக்கார்ட் பண்ணியிருக்கேன். உனக்கு ரொம்பப் பிடிக்குமே. 'தமிழுக்கும் அமுதென்று பேர்...' அந்தப் பாட்டு. நாங்க வர மட்டும், தினமும் அந்தப் பாட்டைக் கேளு. உனக்குக் கார் கிடைச்சதும் முதல்லே என் பாட்டைத்தான் கேக்கணும்...''

பாசத்தின் அடி வேரையே சுருட்டி வைத்தாற் போல அந்தக் காஸட் இருந்தது. இப்போதே, இந்தக் கணமே அதைக் கேட்க வேண்டும் போலிருக்க, காலையில் கிடைத்த அட்வான்ஸ் பணம் பாக்கெட்டில் உரச, ஹோட்டலை ஒட்டியிருந்த பெரும் ஷாப்பிங் காம்ப்ளக்ஸில் நுழைந்தான்.

வாட்சுகளையும், ட்ரான்ஸிஸ்டர்களையும் மலை மலையாகக் குவித்தும், அடுக்கியும் வைத்திருந்தார்கள். ஜப்பான், தைவான், கொரியா எனக் கீழை நாடுகளின் எலக்ட்ரானிக் சமாச்சாரங்களை அடிமட்ட விலைக்கு அள்ளித் தெளித்திருந்தார்கள். உலகத்தில் ஏழில் ஒருவன் இந்தியன் என்கிறோம். துணைக் கண்டம் என்கிறோம். அணுகுண்டு, ஏவுகணை எல்லாம் ரெடி. ஆனால், இங்கு ஒரு ப்ளேடு கூட இந்தியச் சாமானாக இல்லையே என்று எண்ணிய போது எதிரே சாலையில் ஒரு டாடா பஸ் கடந்து சென்று சற்று இதமளித்தது.

எந்த மாடல் வாங்குவது என்று கூடவே பிறந்த குழப்பத்திற்கு ஆளாகி, பிறகு ஒரு மாதிரியாக ஒரு ஸ்டீரியோ வாங்கிக் கொண்டு கடையிலிருந்து வெளிவந்த

போது, சார்லி எதிர்ப்பட்டார.

''என்ன, வந்தவுடனேயே பர்சேஸா? எவ்ளோ கொடுத்தீங்க?''

சொன்னான்.

''த்சு... ஏன் அவசரப்படறீங்க? எனக்குத் தெரிஞ்ச மலையாளி நண்பன்கிட்ட வாங்கினா நாலு தினார் குறைச்சுக் கிடைச்சிருக்கும். பை தி வே, உங்களுக்கு ஆபீஸிலேயே சொல்லணும்னு நினைச்சேன். யாரையும் சார்னு கூப்பிடாதீங்க. இங்கே ஏற்கெனவே இந்தியன்னா வெறும் வேலைக்காரன்னு நினைச்சிட்டிருக்காங்க. மேலும், உங்களுக்குத் தெரிஞ்ச எல்லாச் சரக்கையும் அவசரப்பட்டு வெளியிலே விட்ராதீங்க. இங்கே இருக்கிற லோக்கல் ஊர்க்காரனைத் தவிர, எஜிப்ஷியன்ஸ், பாலஸ்தீனியன்ஸ்னு ஒவ்வொருத்தனும் நம்மகிட்டேந்து கத்துக்கிட்டுத் திடீர்னு டெர்மினேட் பண்ணிடுவானுங்க... இந்தியாவில் நிஜமாகவே கார் ஓட்டியிருக்கீங்க தானே....?''

சார்லியை விட்டால் இன்றைக்கெல்லாம் அறிவுரை வழங்கிக் கொண்டிருப்பார் என்று புரிந்து போக, ஒரு மாதிரியாக அவரைக் கட் பண்ணி விட்டு ஹோட்டல் ரூமுக்கு வந்து அந்தக் காஸெட்டைப் போட்டான்.

''தமிழுக்கும் அமுதென்று பேர்...'' மழலை மொழியில் ப்ரீதி பாட, குழந்தையை நேரிலேயே கண்டு விட்டது போல புளகாங்கிதம் ஆனான்.

நடு இரவில் தொலைபேசி அலறியது.

''யெஸ். யார் பேசறது?''

''மிஸ்டர் ராம்கி. ஐ'ம் ரே ஹியர். இந்த இரவு நேரத்தில் உங்களைத் தொந்தரவு பண்ணுவதற்கு மன்னிக்கவும். ஆபீஸ் கம்ப்யூட்டரில் ஒரு கிரிட்டிகல் ப்ராப்ளம். ஐ திங்க். யூ கேன் ஹெல்ப் அஸ். கொஞ்சம் கீழே லாபிக்கு வர்றீங்களா?''

பாண்ட், ஷர்ட்டுக்குள் புகுந்து அலறிப் புடைத்துக் கொண்டு கீழே வந்த போது ரே உண்மையிலேயே டென்ஷனிலிருந்தான்.

''காரில் போய்க் கொண்டே பேசலாமா?''

கம்ப்யூட்டரில் மாதாந்திரச் சம்பள ரிப்போர்ட்கள் தயார் செய்வதில் பிரச்னை. விவரந்தெரிந்த ஆள் விடுமுறையில் கெய்ரோ போயிருக்க, ஆளுக்கு ஆள் கையைப் பிசைந்து கொண்டு, நைட் ஷிப்டில் ஓவர்டைம் வாங்கிக் கொண்டிருந்தார்கள்.

ராம்கியின் அனுபவத்திற்கு இது ஒரு பச்சா பிரச்னை. விடுவிடுவென்று மானுவல்களைப் புரட்டி, பராமீட்டர்களைச் சரிபார்த்து, பிரச்னைப் பகுதியைத் தனிப்படுத்தி, ஒரு மாதிரி பாட்ச் ஒர்க் பண்ண, ப்ரிண்டர் உயிர்பெற்றுத் துடிக்க ரே மலர்ந்து போனான்.

''அவன் சம்பளம் என்ன தெரியுமா? உன்னோடத விட மூன்று மடங்கு. எல்லாம் வெள்ளைத் தோல். லண்டன்லே ப்ளம்பரா இருந்தவன். இங்கே வந்து நம்பளை மாதிரி ஆளுங்களை வேலை வாங்கி, மேலே போய்த் தான் செஞ்சதாக் காண்பிச்சுப் பான். ஓவர்டைம் கேளுங்க...'' — எங்கிருந்தோ வந்து உதயமாகிச் சார்லி அருளிப் போனார்.

இவருக்கு மூக்கில் எப்படி எல்லா விஷயங்களும் வேர்த்து விடுகின்றன என்று வியக்கையில், பர்ஸனல் டிபார்ட்மெண்டிலிருந்து சலா ஹஸன் வந்து கார் சாவியைக் கொடுத்து விட்டு, ''காரைத் தொடறதுக்கு முன்னாடி, ஒரு போட்டோ எடுத்து, உங்க வீட்டுக்கு அனுப்பிச்சிடு. அவங்க இதை ஃப்ரேம் போட்டு ஊரெல்லாம் பேசிக்குவாங்க...'' என்று அவன் பங்கிற்குத் தன் பொறாமையைக் காட்டிப் போனான்.

நான்கு மணிக்கு ஆபீஸ் விடும் நேரம் வரை ராம்கிக்கு இருப்புக் கொள்ளவில்லை. இப்படியொரு சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தந்த தெய்வத்தையும், அம்மாவையும், படிக்க வைத்த அண்ணாவையும், இவனுக்காகத் தினசரி வேண்டிக் கொண்ட மனைவியையும், தன் பெண்ணையும், எம்.டி. சூரியையும் மாறி மாறி நினைத்துக் கொண்டான். பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்த போது, பத்திரமாக அந்தக் காஸட் இருந்தது.

வெளியே பார்க் செய்யப்பட்டிருந்த அந்த 90 மாடல் ஃபோர்டை மற்றவர்கள் பார்த்து விடாமல் கைகளால் ஒற்றிக் கொண்டான்.

சொகுசான இருக்கையில் கூச்சத்துடன் உட்கார்ந்து சாவியைத் திருப்ப, சடுதியில் இஞ்சின் ஸ்டார்ட் ஆகியது. ஏ.ஸி. விசைகளைத் தேடி அழுத்தினான்.

காஸட்டை எந்தப் பக்கமாக நுழைப்பது என்று தயங்கி, ஒரு மாதிரியாகப் போட்டு ஸ்விட்சை ஆன் செய்யப் போன நேரத்தில் சொல்லி வைத்தாற் போல சார்லி ஓடி வந்தார்.

''ராம்கி! ஒரு நிமிஷம். காரை விட்டு வெளியிலே வாங்க...''

என்ன எதற்கு என்று கேட்கத் தோன்றாமல் ஒரு பதற்றத்துடன் வெளியே வந்தான்.

''பார்த்தீங்களா? இந்தியன் என்றாலே இந்தப் பாலஸ்தீனியர்களுக்கு ஓர் அலட்சியம். கம்பெனி கொடுக்கறது காரை, இவன் கையை விட்டா கொடுக்கறான்? இதுவே ஓர் அரபிக்காவது, இங்கிலீஷ்காரனுக்காவது கொடுத்தால் க்ளீனா சர்வீஸ் பண்ணி மெழுகு போட்டுத் தொடச்சுக் கொடுப்பான்... நீங்க ஒண்ணும் சொல்லாதீங்க. நான் இந்தக் கம்பெனியிலே பதினெட்டு வருஷமாக இருக்கேன். ஒவ்வொரு பயலையும் அளந்து வச்சிருக்கேன். காரை சர்வீஸ்



''நம்ம கல்யாணத்துக்கு, எங்க வீட்டுல பலத்த எதிர்ப்பு இருக்குங்க.''

''கல்யாணத்துக்குத்தானே எதிர்ப்பு காதலுக்கு இல்லையே... கவலையை விடு!''

— சீர்காழி வி. ரேவதி.

பண்ணி, வழுவழுனு துடைச்சுக் கொண்டு வந்தாத்தான் எடுப்பேன்னு சொல்லிடுங்க...'' என்று ஏதேதோ சொல்லி யாரையோ ட்ரான்ஸ்போர்ட் டிபார்ட்மெண்டிலிருந்து அழைத்து, அதிகாரம் பண்ணி, அவன் காரை எடுத்துக் கொண்டு போக, ராம்கி, ''யே... என் காஸட்...'' என்று அலறியது காரிலிருந்த டிரைவருக்குக் கேட்டிருக்காது.

சார்லியை அப்படியே ஒரு குதறுக் குதறிவிடலாமா என்று திரும்புகையில் அந்த ஆள் எப்போதோ மாயமாகி இருந்தார்.

காஸெட் எங்கேயாவது காணாமல் போய் விடப் போகிறதே என்ற உளைச்சலில் ராத்தூக்கம் கெட்டது.

மறுநாள் காலையில், டிரான்ஸ்போர்ட் டிபார்ட்மெண்டிலிருந்து அழைப்பு வர ராம்கி விரைந்தான்.

புது மணப் பெண் போல் கார் வெயிலில் டாலடித்துக் கொண்டிருந்தது.

சாவியைப் பற்றி அவசரம் அவசரமாகத் திறந்த போது,

பயந்தபடியே காஸெட்டைக் காண வில்லை.

கூட இருந்த யேமனி ட்ரான்ஸ்போர்ட் சூபர்வைஸர் ''ஒரு சின்னக் காஸெட்டுக்காகவா இப்படி ஆத்திரப்படுகிறீர்கள்?'' என்று கேட்டு அவனை மேலும் எரிச்சல் படுத்தினான்.

''லுக். அந்தக் காஸெட் எவ்வளவு மதிப்பு வாய்ந்தது என்று எனக்குத்தான் தெரியும். நான் ஒரு கம்ப்ளெயிண்ட் எழுதிக் கொடுக்க விரும்புகிறேன். காரை யார் சர்விஸ் செய்தது? யார் துடைத்தது...?'' என்று அவன் சுபாவத்தையும் மீறின ஒரு வேகம் தவிர்க்க முடியாமல் வெளிப்பட, ஓர் அழுக்கான நீல யூனிஃபார்மிலிருந்த ஆளை அழைத்து வந்தார்கள்.

''இவன்தான். நேற்று சவினிங் ஷிப்டில் வேலை பார்த்தது. உங்க நாட்டுக்காரன் தான். நீயே கேளு'' என்று அந்த யேமனி சூடேற்ற, ராம்கி அந்த ஆளைத் தீர்க்கமாகப் பார்த்தான்.

சிலோன் பொடியன்தான். கண்களில் தெரிந்த கலவரம், ராம்கியைப் பார்த்த மாத்திரத்தில் சற்று தெளிவு பெற, மற்றவர்களுக்குப் புரிந்து விடக் கூடாதே என்ற பயத்தில் மெதுவாகப் பேசினான்.

''சார். மன்னிச்சுக்குங்க. உங்க காஸெட்டை எடுத்துப் போனது — திருடிட்டு இல்லே — நான்தான் சார். அதையும் எங்க ரூம்லே இருக்கிற டபுள் காஸெட்லே போட்டு ரிக்கார்ட் பண்ணிட்டு உங்கக் காரிலேயே வச்சிடலாம்னுதான் சார் எடுத்துட்டுப் போனேன். நான் என் ரூமுக்குப் போய்ட்டுத் திரும்பி வர்றதுக்குள்ளே, இந்தச் சார்லி சார் வந்து காரை ஷெட்டிலிருந்து எடுத்துப் போய்ட்டார் சார். நீங்க புது எம்ப்ளாயீ ஆனதாலே எனக்கு யார்னு தெரியாது சார்...''

நம்புவதா, வேண்டாமா என்று ராம்கி அவனை இன்னும் பார்வையால் ஊடுருவினான்.

''நான் சொல்றது சத்தியம் சார். என் ரூமுக்கு வந்து செக் பண்ணுங்க சார். டபுள் காஸெட் ரிக்கார்டர் இருக்கு. வீடியோ இருக்கு. எவ்வளவோ காஸெட் இருக்கு. ஹிந்திப் பாட்டு, தமிழ்ப் பாட்டு, பக்திப் பாட்டுன்னு ஒரு குறைச்சலில்லை. ஆனா, எதேச்சையாக் கார்லே உங்க குழந்தையோட குரல்லே 'தமிழுக்கும் அமுதென்று பேர்'னு பாடறதைக் கேட்டப்போ, எங்க நாட்டிலே திரிகோணமலையிலே எண்பத்தி ஏழு மார்ச்சிலே . சிங்களர்கள் குண்டு போட்டாங்களே... அதிலே போய்ட்ட என் பொண்ணு பாடறா மாதிரியே இருந்திச்சு சார். நீங்க நம்ப மாட்டீங்க சார். குரலிலும், பாடறதுலேயும் அவ்வளவு ஒத்துமை. அதான் சார். உங்க பெண் காஸெட்டைக் கேட்ட போது தேவலோகத்திலேர்ந்து என் பெண்ணே வந்து பாடறா மாதிரி இருந்திச்சு... வெளியிலே வந்து உங்க காஸெட்டை வாங்கிக்குங்க சார். இங்கே ஆபீஸ்லே எழுதிக் கொடுத்தீங்கன்னா என் வேலை போய்டும் சார்...'' என்று அவன் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனான்.

''வாட் லாங்வேஜ் இஸ் திஸ்? கடபுட கடபுடாவென்று...'' என்று பழிக்கத் தலைப்பட்ட யேமனியை நிறுத்தி, ராம்கி நிதானமாகச் சொன்னான்....

''இந்த மொழியின் பெயர் 'தமிழ்...' எங்கே, ட்ரை பண்ணித் திருப்பிச் சொல்... 'தமிழ்...' ''

## COUNT DOWN — 22

''வேண்டும், நிச்சயம் வேண்டும்'' என்றான் அமீர் ஜவஹர்.

''எனக்கென்ன ஆதாயம் ஸாஹப்?''

''பேப்பர்களைப் பார்க்காமல் நான் எப்படி விலை பேச முடியும் மல்ஹோத்ரா? இதுவரை நீ சப்ளை செய்ததற்கெல்லாம் நான் குறைவாகக் கொடுத்திருக்கிறேனா?''

''ஐந்து லட்சம், மாட்டிக் கொண்டால் என் உயிர் போய் விடும் ஸாஹப்.''

''பேப்பர்களை முதலில் நான் பார்க்க வேண்டும்.''

மல்ஹோத்ரா பெருமூச்சு விட்டான். அமீர் ஜவஹர் ஏமாற்ற மாட்டான் என்று நம்புவதைத் தவிர வேறு வழியில்லை. இந்தப் பணம் மட்டும் கைக்குக் கிடைத்தால் போதும், தலைக்கு மேல் இருக்கும் கடன்களை எல்லாம் ஒழித்து விடலாம். அப்புறமும் பணம் மிச்சமிருக்கும். அயல்நாட்டுச் சாராயமாக வாங்கிக் குடிக்கலாம். நல்ல வாளிப்பான பெண்களைத் தேடி...

மல்ஹோத்ரா தனது அல்னாஷர் கனவுகளை உதறித் தள்ளினான், ஒரு தலையசைப்பின் மூலம்.

''சாந்தினி சௌக்கில் இரவு ஒன்பதரை மணிக்குச் சந்திப்போம்'' என்றான்.

''இன்னும் ஒன்றரை மணி நேரத்திலா?''

''ஆமாம்.''

அமீர் ஜவஹர் தயங்கினான்.

''நாம் சந்திப்பது ஆபத்து'' என்றான்.

''பின்னே? என்ன செய்யலாம்?''

''என் தங்கையைத் தெரியுமில்லையா?''

''சாந்தினி!''

''அவளை வரச் சொல்கிறேன். அவளிடம் வியாபார சம்பந்தமான சில ரகசிய கொடேஷன்களை வாங்குவதற்கு அனுப்புகிறேன் என்றுதான் சொல்வேன். அவளிடம் உளறி வைக்காதே.''

''அச்சா சாப். நைட். நைன் தர்ட்டி. சாந்தினி சௌக். சிங் டிரேடிங் கம்பெனி வாசலில்.''

அமீர் ஜவஹர் ஒத்துக் கொண்டதற்கு அடையாளமாய்த் தலையை அசைத்தவுடன் மல்ஹோத்ரா பாம்பு போல் அவ்விடத்திலிருந்து நழுவினான்.

அச்சுதன் கம்ப்யூட்டரோடு சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்த போது, தொலைபேசி அழைத்தது.

ரகசியம் ஒன்று....






''வா'' என்ற ஒற்றைச் சொல் ஆணை.

ஒற்றெழுத்து ஆக்ஞைகள் எங்கிருந்து வருமென்று அச்சுதனுக்குத் தெரியும். ரிசீவரை வைத்தவுடன், கம்ப்யூட்டரைப் பார்த்து. ''கம்ப்யூட்டர் குறச்சு காத்திரிக்கணும். நின்னே ஞான் திரிச்சு வந்து தோல்பிக்கும்'' என்றான்.

கம்ப்யூட்டர் பதில் சொல்லவில்லை.

தில்லியின் வெப்பம், இரவாகியும் இன்னும் மாயவில்லை. அச்சுதன் நூறு சி. சி. மோட்டார்பைக்கில் ஆரோகணித்திருந்தான். அதன் டயர்கள் சாலையின் நீளத்தைத் தாகத்துடன், அவசர அவசரமாகச் சாப்பிட்டன. நேரு ப்ளேஸில் உயரமான கான்க்ரீட் மாளிகைகளின் தோப்பினூடே பயணம் செய்து நிறுத்தினான்.

லிப்ட்,மின்சாரத்தை ஜீரணம் செய்து , அவனை மேலே தூக்கியது. ஏழாவது மாடியில் நின்று, கதவு திறந்து, 'போய்க்கோ' என்று அவன் பாஷையில் மௌன ஆணையிட்டது.

நீள நடைபாதையில் மஞ்சள் வெளிச்சம் ஒழுகியிருந்தது. நடந்து, ஒன்று, இரண்டு, மூன்றாவது கதவைத் தட்டி விட்டு நுழைந்தான்.

சதுரமான அறை. சதுரமான ஜன்னல்கள். சதுரமான திரைகள். கம்பளம் விரிக்காத தரையில் 'கிய்ங்க் கிய்ங்க்' என்று சப்தமெழுப்பிய சக்கரங்கள்.

''வா அச்சுதன்'' என்றார் கர்னல். இரவுக் கோட்டில் இருந்தார்.

சக்கர நாற்காலியை நகர்த்தி, அச்சுதனுக்கு நேர் எதிரில் நிறுத்தினார்.

''நீ வந்தது யாருக்கும் தெரியாதே?''

''இல்லா சாரே.''

''இன்றிரவு உனக்கு ஒரு வேலை இருக்கிறது.''

''பறயு சாரே.''

கர்னல் அருள்தாஸ் தன் இரவுக் கோட்டின் மேல் பையில் இருந்து நான்காய் மடித்த ஒரு காகிதத்தை நீட்டினார்.

அச்சுதன் வாங்கிப் பிரித்தான்.

''ஆராணு இது?''

''அமீர் ஜவஹர். இரண்டு வருடங்களுக்கு முன்னால் கலிபோர்னியாவில் இருந்து வந்தவன். தங்கை சாந்தினியுடன் இங்கே குடியேறியவன்.''

விவரங்கள் காகிதத்தில் சுருக்கமாக இருந்தன.

அமீர் ஜவஹர். இருபத்திரண்டு வயது. அமெரிக்க பிரஜை. ஒரு தங்கை. சாந்தினி. இருபது வயது. தொழில்: இந்தியாவில் அமெரிக்க செயற்கை வைரங்களை விற்பனை செய்தல். சந்தேகம்: பாகிஸ்தான்

அஞ்சனா மைக்கேல் ராஜ்

**சென்ற வாரம்...:**

கர்னல் அருள்தாஸும், காப்டன் யாதவும் ஒரு வீட்டில் சந்திக்கிறார்கள். ரகசியமான ராணுவ ஃபைல் ஒன்று பற்றிய சந்திப்பு அது. சந்திப்பு முடிந்ததும் ஃபைலை அங்கேயே பத்திரமான ஓரிடத்தில் மறைத்து விட்டுச் செல்கிறார்கள். இவர்களின் பேச்சை டேப் செய்த கர்னலின் வேலைக்காரன் மல்ஹோத்ரா, அதை பாகிஸ்தான் உளவாளியான அமீர் ஜவஹரிடம் போட்டுக் காட்டி, ''அந்த ஃபைல் வேண்டுமா?'' என்கிறான். ''வேண்டும்; நிச்சயம் வேண்டும்!'' என்கிறான் அமீர் ஜவஹர்.

உளவாளி?

''இன்றிரவு ராணுவ ரகசியம் ஒன்று அவன் கைக்கு மாறப் போகிறது.''

கர்னலின் குரல் திடீரென்று அறையின் மௌனத்தை ஊடுருவியது.

அச்சுதன் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

''சாந்தினி சௌக்கில், என் டிரைவர் மல்ஹோத்ராவிடமிருந்து. மல்ஹோத்ரா நாளையிலிருந்து இந்தியாவின் துரோகி. மல்ஹோத்ராவை விட்டு விடு. வேறு ஆளை வைத்து மடக்குகிறேன். எனக்கு அமீர் ஜவஹர் வேண்டும்.''

''யெஸ் சார்.''

''முழுசாக. உயிரோடு.''

''யெஸ் சார்.''

''கோவிந்த்புரிக்குக் கொண்டு வா. நம் மாளிகைக்கு.''

''யெஸ் சார்.''

கர்னல் ஒரு கணம் தயங்கி விட்டு, ''ஆல் தி பெஸ்ட்'' என்று கை கொடுத்தார்.

அவருக்குத் தெரியும், அச்சுதனின் வேலை சுத்தமான வேலை என்று.

இந்திய ரகசிய சர்வீஸின் ஆயிரம் கைகளில் ஒரு கை கர்னல் அருள்தாஸ்; அந்தக் கையின் பல்வேறு விரல்களில் முக்கியமான கட்டை விரல் அச்சுதன்.

அச்சுதன் —

பிளாஸ்டிக் ஒயர் பின்னப்பட்ட எத்தனையோ அரசாங்க நாற்காலிகளில் ஒன்றைப் பகல் நேரங்களில் தேய்த்துக் கொண்டிருப்பவன். தூசு ததும்பும் அரசாங்க பைல்

களுக்கு நடுவே அவன் நுரையீரல்கள் அசுத்தமாகிக் கொண்டிருந்தாலும், அவனுடைய நிஜமான மேலதிகாரி காது குடையும் செக்ஷன் ஆபீஸர் இல்லை. கர்னல் அருள் தாஸ்.

அச்சுதன் —

இருபத்தி நான்கு வயது. நூற்று எண்பத்தி இரண்டு சென்டி மீட்டர். மார்புச் சுற்றளவு தொண்ணூறு சென்டி மீட்டர். செதுக்கிய மீசை. சிராகத் திருத்தப்பட்ட முடிகொண்ட தலை.

அச்சுதன் —

இருபத்தி நான்கு மணி நேரத்தின் எந்த நிமிடத்திலும் நெற்றியில் சந்தனக்கீற்றுடன் மிளிர்பவன். அதனாலேயே முகத்தில் ஓர் அப்பாவித்தனத்தைப் பெற்றவன். உப்பிய கன்னமேடுகளில் ஆரோக்கியம் காட்டுபவன். நயனங்களில் கூர்மை. மேலோட்டமாகப் பார்க்கும் எந்தப் பொருளின் ஆழத்தைப் பற்றியும் விமர்சிக்கும் அளவு ஊடுருவக்கூடிய பார்வை.

அச்சுதன் —

கேரளத்தின் இரிஞ்ஜாலக்குடாவைச் சேர்ந்தவன். அதனாலேயே பேசும் பேச்சில் மலையாள வாடை கலந்திருப்பினும், அது இயற்கை தனக்களித்த போர்வை என்று இயல்பாகவே பேசுபவன். இந்தியாவின் எல்லா பாஷைகளோடும் பரிச்சயம் உடையவன்.

அச்சுதன் — இப்போதைக்குப் போதும்.

மல்ஹோத்ரா மாளவியா நகரின் இருட்டில் மூச்சை அடக்கி விட்டான். பகலில் கர்னலும், கேப்டனும் சந்தித்த வீட்டிற்கு இடதுபுறம் அதை ஒட்டி உருவாகிக் கொண்டிருந்த ஆளில்லாத புதுக் கட்டடத்திற்குள் நடந்தான். காலையிலேயே 'புறாக் கூண்டின்' ஜன்னல் கதவுகளின் கொக்கிகளை நினைவாக நீக்கியிருந்தான். மாளவியா நகரில் எல்லாமே தெரு வீடுகள். ஒரு வீட்டிற்கும், இன்னொரு வீட்டிற்கும் இடைவெளியின்றிக் கட்டுவதால் அவன் வேலை சுலபமாயிருந்தது. புதிதாகக் கட்டப்பட்டுக் கொண்டிருந்த வீட்டின் வழியே அவனுக்குத் தேவையான ஜன்னலை அடைந்து விட்டான்.

ஜன்னல் கதவை நெம்பி வெளியே திறந்தான். ஒரு வளைந்த ஸ்க்ரு டிரைவர் ஜன்னலின் கம்பி டிஸைனை அதன் ப்ரேமோடு கழற்றியது. ஜன்னல் கொட்டாவி விட்டது.

மல்ஹோத்ரா அந்த வீட்டில் நுழைந்தான்.

அரைமணி நேரத் தேடலில், அவன் தரையில் இருந்த மொஸைக் சதுரத்தைக் கண்டு பிடித்தான். உள்ளிருந்த பைலை எடுத்தான்.

தன்னிடமிருந்த காமிராவால் ஒவ்வொரு பக்கத்தையும் காமிராவின் மின்னல் வெளிச்சம் தூவிப் போட்டோ எடுத்தான். வேலை முடிந்ததும் காமிராவில் இருந்து பிலிமை வெகு எச்சரிக்கையாகக் கழற்றினான்.

அந்த வீட்டை விட்டு மல்ஹோத்ரா வெளியேறிய போது, 'புறாக்கூண்டு' முன்பிருந்ததுபடியே இருந்தது.

அச்சுதன் மெல்ல நடந்தான். மனத்தில் சதுரங்கக் காய்களை நகர்த்தி, நகர்த்தி மௌனத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தான்.

ஏதோ ஒரு சாக்கடை ஏப்பம் விட்டிருந்ததில் அந்தப் பிராந்தியமே நாறிக் கொண்டிருந்தது. சொற்ப மீட்டர்களுக்கு அப்பால் பழைய தில்லியின் நவீனரஸ்தாவில் வாகனங்கள் சுவாசக் காற்றை அசுத்தம் செய்தன.

எதிரே சிவப்புக் கோட்டையின் பெருஞ் சுவர்களுக்கு வெளியே சில டூரிஸ்ட் பஸ்கள். அவற்றைப் படுக்கையறைகளாய் மாற்றிக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்த டிரைவர்கள்.

சிவப்புக் கோட்டையில் ராஜ்யம் செய்த முகலாய ராஜாக்கள் தங்களின் பட்டத்து ராணிகளுக்காக பிரத்யேகமாகக் கட்டி விட்ட சாந்தினி சௌக் பஜாருக்கு நானூறு வயதுக்கு மேலாகி விட்டது.

சிலந்தி பின்னிய வலை போல ஒன்றோடொன்று கலக்கும் குறுகிய சந்துகளில் மக்கள் எறும்புகளாகியிருந்தனர். கடைகளின் மாடிப் பகுதியில் குடிசைத் தொழிலாகத் தயாராகும் டெலிவிஷன்கள் மர ஏணியில் இறங்கிக் கொண்டிருந்தன. சாயாக்கள் அடங்கிய ட்ரேக்களும், மூட்டையாகக் கட்டப்பட்ட கம்பளித் துணிகளும், ஜப்பான் பெயரைக் கோந்து போட்டு ஒட்டிய டேப் ரிகார்டர்களும் ஏறின, இறங்கின. மூன்று சக்கரக் குழந்தை சைக்கிள்களை வாழைத்தார் போல, ஒரு சர்தார்ஜி கூலிக்குச் சுமந்தான்.

அச்சுதன் சாந்தினி சௌக்கைப் பார்க்கும்போதெல்லாம், அந்தக் குறுகிய நெரிசலான 'காத்ரா'க்களில் இன்னும் முகலாய வாசனை கலைக்கப்படாமல் இருப்பதைக் கவனித்திருக்கிறான்.

மின்சார உபகரணங்கள் விற்கும் பகுதிக்கு நகர்ந்தான். முதல் கடையில் காலிங் பெல் வாங்குவதற்கு ஒரு குடும்பமே கூடியிருந்தது. இரண்டாவது கடையில் டெலிவிஷன் திரையில் அலையும் பிம்பங்களை வெறித்துக் கொண்டு, வியாபாரத்திற்காக முதலாளி காத்திருந்தான்.

மூன்றாவது, நான்காவது, அதோ ஐந்தாவது கடை.

சிங் டிரேடிங் கம்பெனி.

எதிர்ச்சா[illegible]யல் ஒரு கம்பளிக் கடை காய்ந்து கிடந்தது. அச்சுதன் அந்தக் கடையில் நுழைந்தான். ஒரு ஸ்வெட்டரை எடுத்து விலை பேச ஆரம்பித்தான். அரைக் கண்ணை சிங் டிரேடிங் கம்பெனிக்கு ஒதுக்கி





**SRI PARAMAHAMSA YOGANANDA VIDYASHRAM**
**Kanchipuram High Road, Uthiramerur,**
**Chengai Anna District, Tamil Nadu.**

## ADMISSION NOTICE

* **A RESIDENTIAL CO-EDUCATIONAL SCHOOL** from Std. I to VIII inaugurated by His Holiness Sri Jayendra Saraswathi Swamigal of Kanchi Kamakoti Peetam to fulfil His aspirations to bring back our old India's Heritage and Culture.
* The School admits students from Hindi/Tamil/Telugu/Kannada/Malayalam medium into English Medium and assures to help them cope with the standard of C. B. S. E. in a year.
* The School collects Rs. 6,000/- to 7,000/- only per annum and teaches Karate, Yoga, Photography, Gymnastics, Dance and Music of Classical & Western origin.
* Arrangements to teach boxing, skating, shooting, swimming and horse riding are in progress.
* Admit your children in our Residential School. Whatever they are, we shall change them into the Brightest in a Year or Two.
* The School is situated just 70 k.m. from Madras, 30 k.m. from Kanchipuram and 18 k.m. fromm Chingleput.
* There are no formalities for admission in our School this year; Just bring your children and leave them; we will bring them up.

**PATRON**
**Sri Jayendra Saraswathi Swamigal of Kanchi Kamakoti Peetam.**

**CHAIRMAN**
**T. M. Nataraajan.**

— ADSTART




இளம்பிள்ளைவாதம்
பக்கவாதம் பாரிசவாதம்
திமிர்வாதம் - இவைகளை
குணப்படுத்துவதில்
கோவை தெலுங்கு
பாளையம் டாக்டர்.
அர்ஜுனன் மிகவும்
பிரசித்தம். மற்றும்
இடுப்புவலி, மூட்டுவலி,
ஆர்த்ரைடீஸ், கழுத்துப்
பகுதியில் வரும்
ஸ்பாண்டிலைடீஸ் என்று
எல்லா நோய்களையும்
குணப்படுத்தி விடுவாராம்.
கால்கள் வில்போல் வளைந்து போன நிலையில் உள்ள குழந்தைகளும் இவரது சிகிச்சையால் குணமானதுண்டு. முட்டிக்கால், அதாவது முழங்கால் ஒன்றோடொன்று முட்டிக் கொண்டிருப்பதும், எலும்பு முறிவுகளையும், கூன் முதுகையும் அறுவை சிகிச்சை இல்லாமல் நேர் செய்கிறார். இந்திய அரசாங்கம் இவரது சிகிச்சை முறைகளைப் பற்றித் தெரிந்துகொள்ள ஒரு நிபுணர் குழுவை அனுப்பி, பார்வையிட்டு, இந்தியா முழுவதும் இவரது மேற்பார்வையில் கிளைகள் அமைக்க ஏற்பாடுகளைச் செய்து வருகிறது.

யிருந்தாள்.

திமசொன்று அவளைப் பார்த்தான். சாந்தினி!

அமீர் ஜவஹர்ரை எதிர்பார்த்து வந்தவனுக்கு சாந்தினியின் வரவு ஓரளவு ஆச்சரியமாய் இருந்தது. கர்னல் ஏன் அவள் வரவைச் சொல்லவில்லை? அவருக்கே தெரியாதா? அவள் சாந்தினிதானே? ஒரு பாலியெஸ்டர் சேலையை முக்காடிட்டிருந்தாலும் சாந்தினிதான்.

ஏதோ ஸ்டூடியோவில் மாற்றுக் குறைவான கலவையில் கழுவிய அவளது பாஸ்போர்ட் போட்டோவில் இருந்ததை விட நேரில் பிரமிக்கும்படி இருந்தாள்.

நீளம் குறைந்த சுருண்ட கேசம். இரு கைகளாலும் அள்ளி ஒரு வாழைப் பூ போல் முடித்திருந்தாள். அவளுடைய நயனங்களில் அறியாமை பயம். உதடுகளுக்கு மேல் உப்பு முத்துக்கள். விரல்களைக் கோத்து, முறித்துப் பிரித்ததில் அவளுடைய அவசரம் புலனானது. ஜன்னலுக்கு வெளியே கிளையில் வந்து அமரும் புதுப்பட்சி போல் இருந்தாள்.

அச்சுதன் கையிலிருந்த ஸ்வெட்டருக் குண்டான பணத்தை எடுப்பதற்குள் மல்ஹோத்ரா கண்ணில்பட்டான். ஆகாசம் மின்னலைக் காட்டும் நேரத்திற்குள் காத்திருந்த சாந்தினியை நெருங்கி அவளைக் கடந்து மல்ஹோத்ரா நடந்தான். அவனுடைய கை, மிகச் சிறிய அசைவில் சாந்தினியிடம் அந்தக் கவரை ஒப்படைத்து விட்டதை அச்சுதன் கவனித்தான்.

வெளியே பாய்ந்தான்.

ஆறு தம்ளர்கள் நிறையச் சாயாவுடன் வந்த அந்தப் பருமனான ஆசாமியைக் கவனித்திருக்க வேண்டும். தவறினான். மோதினான்.

தம்ளர்கள் கீழே விழுந்து நொறுங்கிச் சிமெண்ட் தரையில் தேநீர் மேகங்களை வரைந்தன.

''அரே பேவகூஃப்'' என்று தொடங்கிய உமானிடனிடம் இருபது ரூபாய் நோட்டை நீட்டினான்.

உக்காரன் இளித்து, ரூபாய் பெற்று ''மாஃப் கரோஜி'' என்று விலகினான்.

கண்ணாடி கீழே விழுந்து நொறுங்கிய இசை கேட்டு ஒரு நாலைந்து பேர் திரும்பினார்கள். மல்ஹோத்ரா அந்த இடத்தில் இல்லை. அதனால் அவனை இந்த மோதல் கவரவில்லை என்பது அச்சுதனுக்குத் திருப்தியை அளித்தாலும், சப்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தவர்களில் சாந்தினியும் இருந்தாள்.

அது அவனுக்குக் கவலையைக் கொடுத்தது.

கண நேரம் இரு ஜோடிக் கண்களும் சந்தித்தன. சாந்தினியின் நயனங்களில் இருந்த மிரட்சி இப்போது அதிகமாகி இருந்தது. அவளது மை தீட்டிய இமைகள் சிணுங்கின. இமை ஓரங்களில் காக்கையின் கால்தடம் பதிய, அவள் திரும்பி நடந்து முனை அடைந்தாள். திரும்பினாள்.

அச்சுதன் அவள் நுழைந்த வாசலில் நுழைந்தான். கடைகள். கடைகள். ஜனங்கள். ஜனங்கள். எரிந்து எரிந்து அணைந்த மின்சார விளக்குகள். வினோதமான மின்சார ஒலிப்பான்களின் குரல்கள். அதோ சாந்தினி. அதோ... அதோ...

ஜனங்களின் அலைகளில் அவள் புகுந்து, நுழைந்து இன்னொரு வாசல் வழியே வெளிப்பட்டாள்.

அவள் வெளிப்பட்ட சந்தில் இருந்த, ஆங்கிலேயர் காலத்தில் லைசன்ஸ் வாங்கிய, சினிமா டாக்கீஸில் இரைச்சலான இந்திப் படம் முடிந்து, கேட்கள் திறக்கப்பட்டு ஆயிரக்கணக்கான ஜனங்கள், குருவாயூர் கோயிலின் சந்நிதி வாசல் போல நெரித்துக் கொண்டு வெளிப்பட்டார்கள்.

சாந்தினி மிகச் சுலபமாக அந்தக் கூட்டத்தில் கலந்து விட்டாள்.

(தொடரும்)

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1990 — பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகள் :**

1. அடப்பாவிகளா! — நாஞ்சிலமுதன் (பி. சான்தான் குட்டிபிள்ளை)
2. புலன் விசாரணை — எஸ். கண்ணன்
3. மசால்தோசை — சிறுமுகை ஜி. கதிரேசன் (அறிமுகம்)
4. சத்திய சோதனை — லதா (இரா.வேல்ராஜ்)
5. நேர்மை தூங்கும் நேரம் — ஜெ. பாக்கியலட்சுமி
6. பசி வென்றது! — கா. க. வேலாயுதன்
7. ஊன்றுகோல் — 'தேவவிரதன்' (ஜி. ஸ்வாமிநாதன்)
8. அவன் ஒரு மாதிரிதான்... — கே. பி. ஜனார்த்தனன்.
9. வன்மம் — க. ஒப்பிலி அப்பன்
10. கருவறைச் சாபங்கள் — புஷ்பா ராஜ்குமார்
11. புயலுக்குப் பின்னே அமைதி — உஷா தீபன்
12. லட்சிய வேகம் — கே. ஜெயலட்சுமி
13. குழந்தை வேண்டும் — வெ. காமாட்சி (அறிமுகம்)
14. ஒரு கிராமம் தண்ணீரில் மூழ்குகிறது — க. இராசரெத்தினம் (அறிமுகம்)
15. பிறந்தநாள் — வாமன் (தமிழ்ச் செல்வன்) (அறிமுகம்)



''என்னைக் கட்சி மாறச் சொல்லி, தலைவரே வற்புறுத்துறார்!''

''ஏங்க?''

''நான் கட்சியில் பண்ற ஊழலைத் தாக்குப் பிடிக்க முடியாமத்தான்...!''

— மணியன் தர்மலிங்கம்.

''படத்தைத் தயாரிச்சதோட நடிக்கும் இருக்கும் உங்களுக்கு, உங்க நடிப்பு நிச்சயமாக் கைகொடுக்கும்னு எல்லாரும் பாராட்டினதாச் சொல்றீங்களே, என்னவா நடிச்சீங்க?''

''பிச்சைக்காரனா...?''

— வி. ரேவதி.



''ஏங்க, வரும்போது ஒரு கார்டு வாங்கிட்டு வாங்க, எதிரொலிக்கு எழுதணும்...''

''என்ன எழுதப் போறே?''

''நேத்து ஷோபனா ரவி கட்டியிருந்த புடைவை நல்லாயிருந்திச்சு. எங்கே வாங்கினாங்கன்னு கேட்டு எழுதணும்.''

— டி. என். பாலகிருஷ்ணன்.





''என் மவன் ரொம்பப் பெரிய சினிமாப் பைத்தியமா இருக்கான்; எவ்வளவு மோசமான படமா இருந்தாலும், மூணு தடவை பார்த்துடறான்!''

''அவன் எவ்வளவோ தேவலாம்; என் மவன் வால் போஸ்டரையே ஒண்ணரை மணி நேரம் பார்த்துக்கிட்டு நிற்கிறான்!''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

''தலைவர் மேடைக்கு வந்ததும் நாற்காலியில் உட்காராமல் தரையில் உட்காருகிறாரே, ஏன்?''

''தமக்கு நாற்காலி ஆசை இல்லையாதுன்னு சிம்பாலிக்காச் சொல்றாராம்!''

— எஸ். முகம்மது ரூகப்.



# வெள்ளி விழாப் பெண்கள்




ஓர் இயல்பான ஞாயிற்றுக் கிழமையின் சந்தோஷத்தைக் கூட்டுவதாக இருந்தது வைதேகியின் வருகை. அப்பா வீட்டில் இல்லை என்றால் எல்லோருக்கும் சுதந்திரச் சிறகுகள் முளைத்து விடுகின்றன என்றாலும் ஞாயிற்றுக் கிழமைக்கு உண்டான சுகம் யாராலும் குறைக்கப்படுவதில்லை. சங்கரும், ரமாவும் தூக்கி எறிந்த புத்தக பைகள் ஷெல்ஃப் மூலைகளில். சங்கர் வாசலில் பம்பரத்துக்கு அபீட் எடுத்துக் கொண்டிருந்தான். உமா ஹால் சுவரில் சாய்ந்து கொள்ள, மடியில் வளர்ப்புப் பிராணி மாதிரி டிரான்ஸிஸ்டர். 'விடியும் வரை தூங்குவோம்' என்று பாடிக் கொண்டிருந்தது.

''அய்ய் வைதேகி'' என்ற சங்கரின் குரல் தான் சகலத்தையும் கலைத்தது. அம்மா அடுப்பைச் சின்னது பண்ணி விட்டு, வாசலுக்கு ஓடினாள். ரமா கையிலிருந்த புத்தகத்தை வைத்து விட்டு வாசலுக்கு ஓடினாள். உமா ட்ரான்ஸிஸ்டரை மூலையில் சாய்த்து விட்டு வாசலுக்கு ஓடினாள்.

வாசலில் வைதேகி. அதே சிரிப்பு. கையில் இரண்டு சூட்கேஸ்கள். முகத்தில் பயண அசதி.

அம்மா கண்டுபிடித்து விட்டாள்.

''அவர் வரலியாடி?''

ஒரு தலையசைப்பு. இல்லை. கூடப் பிறந்தவர்களுடன் பேசிக் கொண்டே உனக்கும் பதில் அளிக்கிறேன் என்பது போல் ஒரு பாவனை. இயல்பாக இருப்பதாக

நினைப்பு மட்டும்.

"அப்பா எங்கே?"

"இது என்ன புதுக் கேள்வி? எந்த ஞாயித்துக் கிழமை அவர் வீட்டில் தங்கி இருக்கார்?"

"எப்பவும் போலத்தானா?"

"என்னிக்கு மாறும்?"

அவள் கொண்டு பரப்பிய சாமான்களில் ஒரு பத்தற்றம் இருந்தது. பிரஷ் கொண்டு வரவில்லை அவள். இரண்டு நாள் தங்கல் இல்லை. மொத்தமாக வந்து விட்டது போல இரண்டு பெரிய ஸூட்கேஸ்கள் முழுவதும் புடைவைகள்.

புழக்கடையில் தனியான சந்தர்ப்பம் அமைய அம்மா கேட்டாள்.

"ஏன் அவர் வரலை வைதேகி?"

வைதேகி அம்மாவை விடாமல் கண்ணுக்குள் பார்த்தாள்.

"அவர் வர மாட்டார்மா."

"என்ன வைதேகி?"

"சொல்றேன். இப்பவே எல்லாருக்கும் தெரிய வேண்டாம். ஆனா ஒண்ணு நிச்சயம். நான் குழம்பிப் போயிருக்கேன். ஓர் இருபத்தஞ்சு வருஷ வாழ்க்கையின் அனுபவத்தோட நீ இருக்கே. பதில் அல்லது ஆறுதலாவது கிடைக்கும்னு நினைக்கறேன். அதுவரைக்கும் மத்த எல்லாருக்கும் ஒரு பொய். அவர் ஆபீஸில் ட்ரெயினிங்னு வெளியூர் போயிருக்கார். நான் பொறந்த வீடு சீராட வந்திருக்கேன். சரியா?"

அம்மாவின் வாழ்க்கை இருபத்தைந்து வருஷத்துக்கு முந்தைய கதை. அனுபவங்கள், வார்த்தைகள், சொற்கள் எல்லாமே தேய்ந்து போன நிலையில் தேடக் கிடைத்தாலும் மொத்தமாக ஒரு கனிப்பு இருக்கும். வைதேகி அந்தக் கனிப்பை அறிய வந்திருக்கிறாள்.

"வைதேகிக்குக் கல்யாணம் பண்ணலாம்னு இருக்கேன்!" அப்பாவின் கட்டளை வாக்கியம். அம்மா பணியவில்லை.

"அவளுக்கு வயசாகலை!" மாறுபட்ட பதில். அதுவும் அம்மா சொல்லும் பதில்.

"இந்த ஆனி வந்தா இருபத்தி மூணு முடியறது."

"நல்ல வேலையில் அவள் ஸ்திரமாகட்டும்."

"பெண்களுக்கு வேலை முக்கியமில்லை."

"என் காலத்தில்."

"அவள் உன் பெண்."

"காலம் என்னுடையதில்லை."

அம்மா சாதித்து விட்டாள். மூத்தவள் பெண். அப்பாவுக்கு வருமானம் போதாது. கூடவே சீட்டுப் பழக்கமும். இரண்டு நாள் வீடு முழுவதையும் பட்டினி போட்டு காலேஜ் ஃபீஸ் கட்டிய காலங்கள் உண்டு.

"ஏம்மா இவ்வளவு கஷ்டப்பட்டு என்னைப் படிக்க வைக்கறே?"

"சொல்றேன்."

"எப்போ?"

"சமயம் வரட்டும்."

"உத்தியோகத்துக்கு அனுப்பப் போறியா?"

"ஆமாம்."

"ஏன்? அப்பன் உருப்படியில்லாத குடும்பத்தில் பெண் வேலைக்குப் போவது வறுமை நிர்பந்தங்கறதுனாலயா?"

"புரியலை."

"பச்சையாச் சொல்லட்டா? சோத்துக்கு வழியில்லாமத்தானே என்னை வேலைக்கு அனுப்பணும்னு படிக்க வைக்கறே?"

"முண்டம். பசி எனக்கும் என் பிள்ளைகளுக்கும் புதுசு இல்லை."

"பின்னே எதுக்கு என்னை வேலைக்குப் போகணும்னு சொல்றே?"

"சொல்றேன்."

அம்மா சொல்லவில்லை. வைதேகி புரிந்து கொண்டாள். பாங்க் உத்தியோகம் கல்யாணத்தில் பெண்களுக்குக் கண்ணுக்குத் தெரியாத வரதட்சணை என்பது தெரிந்தது. அப்பாவின் ஈகோ பயம்—பெண்களுக்குக் கல்யாணம் பண்ணக் கூட முடியாதவர் என்பதால் வரும் அவமானம்—வைதேகிக்கு வரன் தேடச் சொன்னது. வேலை பார்க்கும் பெண் என்னும் சலுகையில் வைதேகிக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது. இதற்காகவா படிக்க வைத்து வேலைக்கு அனுப்பினாள். "இல்லை" என்றாள் அம்மா. "சமயம் வரும் போது சொல்கிறேன்" என்றாள்.

"என்ன காரணம்?" என்றாள் அம்மா.

எல்லோரும் தூங்கிப் போய் விட்டார்கள். அப்பாவிடமும், மற்றவர்களிடமும் பொய் முழு விச்சுடன் சொல்லப்பட்டதால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அப்பாவின் பொறுப்பின்மை இன்னும் ஒரு கரும்புள்ளியாக ஒட்டிக் கொண்டிருக்கிறது. புயலடித்துச் சிதிலமான கிராமம் போல் மாறிப் போன வீடு. விருப்பத்திற்கு ஏற்ற படிப்பு இங்கே யாருக்கும் அமையவில்லை. வைதேகிக்கு பியூஸியும் டைப்ரைட்டிங் ஹையரும், உமாவுக்கு பிளஸ்டூவும், டைலரிங்கும். ரமா மட்டும் பி.காம். பொருளியல் தொடர்புடைய படிப்பு. தலைவனின் பொறுப்பின்மை பிள்ளைகளின் மேல் கவிழ்ந்த விடு.

அம்மா திரும்பவும் கேட்டாள். "என்ன காரணம்?"

"எதுக்கு?" என்றாள் வைதேகி.

"நீ மட்டும் தனியா வந்ததற்கு?"

"பெண்கள் அவர்களுக்குரிய இடத்தை ஆடவர்களிடமிருந்து இன்னும் பெற

சக்தியப்ரியன்



அருள்வாக்கு

குரு எப்படி இருக்கிறார்? நாம் தப்புப் பண்ணினால் உடனேயே எடுத்துச் சொல்லிக் கண்டிக்கிறார். நமக்கு உறைக்கும் படி கரித்துக்கூடக் கொட்டுகிறார். நாம் ஒரு தப்பு பண்ணக் கூடிய நிலைமை ஏற்படும் போது, "இது குருவின் காதுக்குப் போய் விட்டால் என்ன ஆவது?" என்ற பயம் ஏற்பட்டு நம்மைக் கட்டிப் போடும். அவர் ஆத்மசக்தி நிறைந்த குருவாயிருந்தால் நாம் எங்கே என்ன தப்புப் பண்ணினாலும் அவர் தாமாகவே தெரிந்து கொண்டு விடுவார். அவ்வளவு சக்தியில்லாவிட்டாலும், அல்லது சக்தி இருந்தும் அதை வெளியில் காட்டாதவராக இருந்தாலும் — மனுஷ்ய விளையாட்டு விளையாடுவதில் பல குருக்கள் இப்படி (த்தெரிந்தும் தெரியாத மாதிரி) இருப்பதுமுண்டு. இப்படி இருந்தாலும் — வேறே யாராவது சொல்லி நம் தப்பு அவருக்குத் தெரிந்து விட்டால் அப்புறம் நம் கதி என்ன என்ற பயம் இருந்து கொண்டேயிருக்கும். அது நம்மைத் தப்பிலிருந்து தடுக்கும்.

இதே போல நாம் ஒரு நல்லது பண்ணினாலும் குரு அதை உடனே தாமாகவேயோ, இன்னொருத்தர் சொல்லியோ தெரிந்து கொண்டு — அல்லது இது நாம் பண்ணிய நல்லதல்லவா? அதனால் நாமே எப்படியாவது அது அவர் காதில் விழுகிற மாதிரி செய்து விடுவோம்! இப்படி ஏதோ ஒரு விதத்தில் அவர் தெரிந்து கொண்டு — நம்மை மெச்சி, விசேஷமாக ஆசீர்வாதம், அநுக்ரஹம் பண்ணி, மேலும் மேலும் உத்ஸாஹப்படுத்துவார். ஒரேயடியாகமெச்சினால் நமக்கு மண்டைக்கனம் ஏற்படுமென்பதால், 'தப்புக்காக சிஷ்யனை வெளிப்படக் கண்டிக்கிறது போல அவன் செய்யும் நல்லதற்காக வெளிப்படச் சிலாகிக்கக் கூடாது' என்று வைத்துக் கொண்டிருக்கும் குரு கூட ஸூக்ஷ்மமாக, ஆனாலும் சிஷ்யனுடைய மனஸுக்கு நிச்சயமாகத் தெரிகிற விதத்தில் ஏதோ ஒரு மாதிரி தம்முடைய ஸந்தோஷத்தைக் காட்டி அதற்காக ஓர் அநுக்ரஹம் செய்யத்தான் செய்வார்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

வில்லை என்னும் ஒரே காரணம்."

"புற அளவில் அவர் உன்னை பலாத்காரம் பண்ணுகிறாரா?"

"எந்த அர்த்தத்தில் இதைச் சொல்கிறாய்?"

"அடிப்பது, உதைப்பது இது போன்று?"

"இல்லை."

"பின்?"

"கருத்துச் சுதந்திரமின்மை கூட ஒருவகை பலாத்காரம்தான்மா, தன் கருத்தை அடுத்தவர்கள் மீது திணிப்பது கூட பலாத்காரம் தான்."

"அவர் சொல்வதை ஏற்றுக் கொள்வதில் உனக்குச் சிரமமிருக்கிறதா?"

"இல்லை. ஆனால் மறு பக்கத்திலிருந்தும் இதைப் பார்க்க வேண்டாமா?"

"எப்படி?"

"அவர் சொல்படிதான் எல்லாம் நடக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறார். எப்படி இது சாத்தியமாகும்? பணிதல் என்பதை நான் அவமரியாதையாக நினைத்ததில்லை. அதே பணிதலை அவரிடமும் நான் எதிர்பார்க்கிறேன். அவர் சௌகரியத்திற்கு நான் மதிப்பளித்து நடந்து கொள்வதைப் போலவே அவரிடமும் எதிர்பார்க்கிறேன். கிடைக்கவில்லை. உள்ளே வைத்து மருகுவது ஒருநாள் வெடிக்கிறது. சண்டை. நான் பெரிசா? நீ பெரிசா? ஒரு வாரம் முழுக்கப் பேச்சுக் கிடையாது. சமாதானமாகும். திரும்பியும் வேதாளம் முருங்கைமரம்."

வைதேகி பதில் சொல்லாமல் அழுதாள்.

"அழாதே வைதேகி. கூடத்தில் படுத்திண்டிருக்கறவா முழிச்சிண்டுடப் போறா!"

"நான் என்னம்மா செய்யட்டும்?"

"போய்த் தூங்கு. தூங்கினாத் தெளிவு வரும்."

"நீ எப்படி அப்பாவுடன் உனக்கு உண்டான வலியையும், வேதனையையும் தாங்

கிண்டேன்னு சொல்லு. இருபத்தஞ்சு வருஷம் கூடவே இருந்ததால் ஏற்படும் பரிச்சயம் மட்டுமே நம் திருமணங்களை இன்னும் பிரிக்காமல் இருக்கிறதா?''

''தூங்குன்னு சொல்றேனில்ல? கார்த்தால பேசிக்கலாம்.''

வைதேகி எழுந்து போனாள்.

அம்மாவுக்குத் தூக்கம் வரவில்லை. தனக்குத்தானே வருவதுதானே தெளிவு? இதில் அடுத்தவர்கள் என்ன? பார்வை நம்முடையதுதானே? அடுத்தவர் சொல்லிக் கொடுத்துப் பார்ப்பது எப்படிப் பார்வையாகும்? வைதேகிக்கு இது புரிய வேண்டாமா?

சிம்மாசனம் நல்ல சிம்மாசனம் இல்லை என்பது சபைக்கு வந்த பிறகுதானே தனக்கும் தெரிந்தது. குடியாலும், சீட்டாலும், ஆணவத்தாலும் செல்லரித்துப் போன சிம்மாசனம்.

இருபத்தைந்து வருஷ வாழ்க்கை. அதே முகம். உடல் முழுவதும் பரிச்சயம். இடது காது நுனியில் சின்னதாக வளைவு ஒன்று உண்டு. வலது மார்பில் சிவப்பு, சிவப்பாக இரண்டு மச்சம். அகலமான பாதங்கள். காலம் இளமையை வாங்கிக் கொண்டது என்பதைத் தவிர வேறு எதுவும் மாறவில்லை. முக்கியமாக ஆண் என்னும் தன்மை.

வைதேகி சொன்னது நினைவுக்கு வந்தது.

இருபத்தஞ்சு வருஷம் கூடவே இருப்பதால் ஏற்படும் பரிச்சயம் மட்டுமே நம் திருமணங்களை இன்னும் பிரிக்காமல் இருக்கிறதா? நிஜமா?

பதில் கிடைக்கும் முன் அம்மாவும் தூங்கிப் போனாள்.

மறுநாள் அப்பாவிடம் விஷயம் சொல்லப்பட்டது. தாமே சுமைகளைத் தாங்கும் தேவதூதர் போல சபையில் கத்தி, விஷயத்தை அம்பலமாக்கினார். மொத்தமாக அவள் திரும்பி வந்ததற்குக் கத்தினார்.

''மத்தியான பஸ்ஸுக்குக் கிளம்பு நீ. அது என்ன மனஸ்தாபம்னா பொட்டியைத் தூக்கிண்டு பொறந்த வீட்டுக்கு வர்றது? விட்டுக் கொடு. பொம்பளைங்க விட்டுக் கொடுக்கறதில் தப்பில்லை. அப்பத்தான் வீடு உருப்படும்!'' அப்பா இரைந்தார்.

''நான் என்னம்மா செய்யட்டும்?''

''மத்யான பஸ்ஸில் மதுரை கிளம்பு.''

''அம்மா...''

''அப்பா சொன்னதைத்தான் நானும் சொல்றேன். ஆனா உன் புருஷன் வீட்டுக்கு இல்லை. மதுரையில் லேடீஸ் ஹாஸ்டல் இருக்கா?''

''இருக்கு.''

''அதில் போய்த் தங்கு''

''ராஜேஸ்வரி...'' அப்பா கத்தினார்.

''எனக்குச் சரின்னு படறதைச் சொல்றேன். இது என் உத்தரவு இல்லை. யோசனை. ஆண்கள் மத்தியில், அவர்கள் இயற்றிய தர்ம நெறிகளின்படி, அவர்கள் இயற்றிய சட்டத்தின்படி கல்யாணம் ஆன பெண்களுக்குப் பேசும் வாய் கூட புருஷன் தான். ஆண்களுக்குப் பெண்ணும் சமம். அவள் ஒரு காதல் உயிர் என்னும் நினைப்பு வராத வரையில், எந்தக் கல்யாணமும் சந்தோஷம் தரக்கூடியதல்ல. முதல் இரண்டு வருஷத்தில் புருஷ குணம் புரிந்து விடும். அடி, வலி எல்லாம் மனசில் தங்கி விடும். பயம் வரும். எப்படி இந்த மிச்ச வருஷத்தை ஓட்டப் போறோம்னு தோணும். குழந்தை பிறக்கும். நேசம் பண்ண வேற்று முகம் கிடைத்த சந்தோஷத்தில் புருஷனை மறக்கும். நம் தேசத்தில் எழுபத்தைந்து சதவீதத்துக்கு மேற்பட்ட குழந்தைகள் அம்மாக்களால் உருவாவதற்கு இதுதான் காரணம். பின்னால் புருஷ முகம் பழகிப் போகுமே தவிர, பிரியமாய்ப் போகாது. வைதேகி இப்போது முதல் மூணு வருஷத்தில் இருக்கா. இரண்டு தலைமுறை மாறியிருக்கு. ஆண்கள் மாறலை. ஆணவம் மாறலை.''

அப்பா அம்மாவை எல்லோருடைய முன்னாலும் ஓங்கி அடித்தார்/அம்மா அழவில்லை.

''என் இருபத்தஞ்சு வருஷ அனுபவத்தை வச்சு ஒரு பதில் சொல்லச் சொல்லி அவதான் கேட்டா. எனக்குப் பொய் சொல்லத் தெரியலை.''

''இருபத்தஞ்சு வருஷம் முன்னால் ஏண்டி இதைச் சொல்லலை?''

''எனக்கு வேலை இல்லை.''

வைதேகி அம்மாவின் கைகளைப் பற்றி அழுத்தினாள். அம்மா தன்னை உத்யோகம் பார்க்க நிர்ப்பந்தித்த காரணம் புரிந்தது. மத்யானம் மதுரைக்குக் கிளம்பத் தயாரானாள்.

''பரீட்சையில் எல்லாக் கேள்விகளுமே கலபமாகத்தானே இருந்திச்சு, நீ ஏன் சரியா எழுதலை?''

''நான் கஷ்டமான கேள்விகளை மட்டும்தான் படிச்சுட்டுப் போயிருந்தேன்!''

— ஞா. ஞானமுத்து.



# அதிர்ஷ்ட தேவதை

18

கதவைத் திறந்த தனம், கோமதியின் சிரித்த முகத்தைக் கண்டதும் ஆச்சரியப் பட்டுப் போனாள்.

''உள்ளே வரலாமா, தனம்?''

''வாங்கம்மா...'' என்று ஒரு பாயை எடுத்துப் போட்ட தனம் பரபரப்போடு சென்று முகத்தைக் கழுவிப் பொட்டிட்டுக் கொண்டு வந்தாள்.

தனம் பூவும் பொட்டுமாய்த் திரும்பி வருவதற்குள், கோமதி பையிலிருந்து ஒரு பிளாஸ்டிக் தட்டை எடுத்து அதன் மீது பூ, வெற்றிலைப் பாக்கு மஞ்சள் பழமெல்லாம் அடுக்கி வைத்து விட்டாள். ஒரு சோளித் துண்டு வேறு.

அயர்ந்து போய் நின்று, தன்னையே பார்த்துக் கொண்டிருக்கும் தனத்திடம்,



''உட்கார் தனம், உட்காரு. இன்னிக்கு வெள்ளிக்கிழமை. நீ சுமங்கலிப் பொண்ணு. நான் உன்னை விட வயசிலே ரொம்பப் பெரியவ. என் கையாலே மஞ்சள் குங்குமம் கொடுத்து நீ அதை வாங்கிக்கணும்னு எனக்கு ஆசை. நீ நன்னா இருக்கணும்னா ரங்கனும் நன்னா இருக்கணும். இல்லியா?'' என்றாள்.

தனம் தட்டைப் பார்த்தாள். பூ பழம் மஞ்சளெல்லாம் இருந்தன. ஆனால் பணம் இல்லையே? முதல் தேதிக்கு இன்னும் நான்கு நாட்கள் இருக்கின்றன. இவள் மீண்டும் பணம் கொடுக்கவென்று வருவாளோ?

அவளுடைய முகமாற்றத்தைக் கோமதி புரிந்து கொண்டாள்.

''மொதல்ல உட்கார் தனம்.''

தனம் உட்கார்ந்தாள். பணம் வரவில்லை என்ற எண்ணம் பிறந்த போது அலுப்புத் தட்டியது.

''நீ இப்ப இந்தத் தட்டை வாங்கிக்கோ.''

தனம் வாங்கிக் கொண்டாள்.

''வெத்திலைக்கு அடியிலே என்ன இருக்குன்னு பாரு.''

பார்த்தாள்.

ஒரு சிறு காகித உறை.

தனம் எடுத்தாள்.

''பத்து நூறு ரூபா நோட்டை நாலா மடிச்சு சின்னக் கவர்ல போட்டேன்'' என்றாள் கோமதி.

தனம் பரபரப்புடன் நோட்டுகளை எண்ணினாள்.

''ஆயிரம் இருக்கா?''

''இருக்கும்மா.'' சொன்னவள் எழுந்து நமஸ்கரித்தாள்.

''நன்னாயிரு!''

கோமதி எழுந்தாள்.

''நான் போய்ட்டு வரேன்.''

''பாங்க்லேர்ந்து லாட்டரிப் பணம் வந்திருச்சாம்மா?''

''வரல்லேன்னு ரங்கன் சொன்னான். இன்னும் ஒரு மாசம் ஆகுமாம்.''

''வந்ததும் புச்சா வீடு பார்த்துக் கொடுத்துடுவீங்க இல்லே?''

''நிச்சயமா.''

''ஏம்மா, ஒங்க காதில மின்னுதே கம்மலு, அது வைரம்தானே?''

''ஆமாம். என்ன சந்தேகம் உனக்கு, தனம்?''

''இதே மாதிரி கம்மலு எனக்கும் வாங்கிக்

கொடுங்கம்மா.''

''லாட்டரிப் பணம் வந்ததும் என்னோட மொதல் வேலையே அதுதான் தனம்!''

கோமதி நகர்ந்தாள்.

''ஏம்மா, லாட்டரிப் பணம்தான் இன்னும் வரலியே... இந்த ஆயிரம் ரூபாய் என் புருசனுக்கு எங்கேர்ந்து கெடைச்சது?''

''என் புள்ளை ரமணிகிட்டேர்ந்து கடன் வாங்கினான்.''

''நான் எப்பம்மா உங்க வூட்டுக்கு வரலாம்?''

''எப்ப வேணும்னாலும் வா. ஆனா இந்த வாரம் வேண்டாம். நாலும் ரமணியோட அப்பாவும் நாலஞ்சு நாளுக்கு ஊர்ல இருக்க மாட்டோம். ரமணியும் ரங்கனை அழைச்சுக்கிட்டு வெளியூர் போனாலும் போவான்.''

''எதுக்கு மா?''

''லாட்டரிப் பணம் எப்பத்தான் நிச்சயமா வரும்னு தெரிஞ்சுக்கத்தான்.''

''பணம் வந்ததும் எனக்குத் தகவல் குடுக்கச் சொல்லுங்கம்மா!''

''ஓ. தகவல் கொடுக்காம? அதை விட எங்க யாருக்கும் என்ன வேலையும் இல்லியே, தனம்?''

கோமதியின் நெக்கலை தனம் புரிந்து கொள்ளவில்லை.

கோமதி ரிக்ஷாவை நோக்கிச் செல்லுவதையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்கையில் திடீரென்று மயில்சாமியின் குரல் கேட்டது.

''கண்ணு அந்த அம்மாவைத்தான் நான் பார்க்கணும்னு சொல்லிட்டிருந்தேன். இன்னிக்குப் பார்த்துட்டேன்.''

''நயினா! நீயா?''

''ஏன் என்னைப் பார்த்தா பக்கத்து வூட்டு ஆள் மாதிரித் தெரியுதா? நான்தான் ஒன் அப்பன் மயில்சாமி.''

''நீ வர வேண்டாம்னு சொல்லியிருக்கேனே?''

''நீ சொன்னா என்ன தங்கம்? தெருவிலே வந்துட்டிருந்தேனா? ஒரு சைக்கிள் ரிக்ஷாவிலே ஒரு அம்மா வந்ததைப் பார்த்தேன். நம்ப சந்து மொனையில நின்னுதா. எனக்கு சுபால்னு ஆச்சு. யார்டா இவன்னு யோசிச்சேன். அம்மா எறங்கி நம்ப வூட்டுக்குப் போச்சா. உடனே ஜகா வாங்கிக் கொஞ்ச நேரம் நின்னேன். அவ உள்ளாரப் போனப்புறம்தான் நானும் நைஸா வந்து, கதவண்டை நின்னுக்கிட்டேன்.''

''அடப்பாவி!''

''எனக்கு அந்தப் பூ பழமெல்லாம் வேணாம். ஒரு ஐந்நூறு ரூபா கொடு.''

தனம் வீட்டினுள் பின்வாங்க, மயில்சாமி முன்னேறி உள்ளே புகுந்தான்.

பி.வி.ஆர்

''உள்ளார வராதேய்யா!''

''வாசல்லே நின்னு பணத்தை வாங்கிக்கச் சொல்றியா கயிதே... நான் ஒன் அப்பன்ம, பிச்சைக்காரன் இல்லே!''

''ஐந்நூறு ரூபா ஏது... அந்த அம்மா குடுத்ததே இருநூறு ரூபாதான்!''

''கயிதே பொய்யா சொல்றே? நான் அல்லாத்தையும் கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன். பத்து நூறு ரூபா நோட்டு இல்லே. அதை அந்த அம்மா கவர்ல போட்டு வெத்திலைக்கு அடியிலே வைக்கலே?''

''இன்னாய்யா பெரிய ரோதனையாப் போச்சு!''

''இதப்பாரு தனம் இப்பவே சொல்லிட்டேன்... உனக்கு எம்மாம் பணம் வந்தாலும் சரி, அதில பாதி எனக்கு...''

''தராட்டி?''

''உனக்குச் சல்லிக்காசு வராம நானே செய்ஞ்சுடுவேன்.''

''யோவ் மிரட்டறியா?''

''நான் ஏன்ம மிரட்டணும்? உன் கதை பூராவையும் அந்த ரமணி கையில சொல்லிடுவேன். அந்த ஆளு, நிச்சயமா பத்தாயிரமோ இருபதாயிரமோ எனக்குக் கொடுப்பான்... ஏன்னா உனக்கு லட்சம் லட்சமாப் பணம் தரத் தாவலே இல்லே?''

மயில்சாமி அவசரப்படாமல் அழுத்தமாகப் பேசப் பேச, தனம் உள்ளூர நடுங்கினாள்.

''இருநூறு வாங்கிக்கிட்டு நடையைக் கட்டு, நயினா.''

''அதான் முடியாது. ஐந்நூறு ரூபா... அஞ்சு நோட்டு. எடுத்து மொதல்ல கீழே வை!''

மயில்சாமி வெற்றியுடன் வீட்டை விட்டு வெளியேற, தனம் தோல்வியில் அவனை எழுத்தில் வடிக்க முடியாத வார்த்தைகளால் தாக்கினாள்.

நாட்கள் ஓடின.

மீனாட்சி கலியாண மண்டபத்தில் மாலுவின் அக்கா சுமதியின் கலியாணம் கூட நடந்து முடிந்தது.

ஒருநாள் சனிக்கிழமை அதிகாலையிலேயே புறப்பட்டு, நாலாம் நம்பர் பஸ்ஸில் ஏறின ரமணி வால்டாக்ஸ் சாலையில் ட்ரெவெல்யான் பேசின் நிலையத்தில் இறங்கினான்.

பல சந்துகள் வழியாக நடந்து நடந்து, ஒரு சிறு வீட்டின் முன் அவன் நின்றான். அவனைக் கண்டதும் ஒரு நடுத்தர வயதுக்காரி, முகமெல்லாம் புன்னகையாக, ''யார் வேணுமுங்க?'' என்று கேட்டாள்.

''வடிவேலு வீடு இதானே?''

''இது என் வீடு. வடிவேலு என் புள்ளை. பாக்டரிக்குப் புறப்பட்டுட்டிருக்கான். உங்களுக்கு என்ன வேணும்?''

''வடிவேலுவைப் பார்க்கலாம்னு



"நான், 'ரிடையர்' ஆகிப் போறதுக்காக நீங்க, ஏன் இவ்வளவு வருத்தப்பட றீங்க...?"

"இந்த ஆபீஸ்லேயே கம்மியா 'வாங்கி னது' நீங்கதானே, சார்!"

— ஆர். அப்துல் சலாம்.

மயிலாப்பூர்லேந்து வர்றேன்!" என்ற ரமணி, உள்ளேயிருந்து காக்கி உடுப்பில் ஒரு இருபத்தெட்டு அல்லது முப்பது வயதுக் காரன் வருவதைக் கண்டான்.

"யார் அம்மா?"

"உன்னைப் பார்க்கத்தான் இவர் வந்திருக்காரு, வேலு!" என்ற அவள் இன்னமும் அங்கே நிற்காமல் உள்ளே சென்றாள். அவன் நின்றிருந்த இடத்துக்கு வடிவேலு வந்தான்.

"என்னையா பார்க்க வந்திங்க சார்?"

"ஆமாம்."

"உள்ளே வாங்க."

"வேண்டாம் வடிவேலு. இன்னொரு வாட்டி வர்றப்ப நான் உள்ளே வரேன். உங்க வீட்டு காப்பி டீயும் குடிக்கிறேன். வேலைக்குப் புறப்பட்டிருக்கீங்க போலிருக்கு."

"ஆமாம் சார். இன்னிக்கு பகல் டியூட்டி. பத்து மணிக்குப் பாக்டரியில இருக்கணும். அதுவும் பெருங்குடியிலே."

"எப்படிப் போறே?"

"கம்பெனியிலே மோபட் கொடுத்திருக் காங்க சார்."

"இங்கிருந்து இருபத்தஞ்சு கிலோ மீட்டர் இருக்குமே?"

"போய்ச் சேர்றதுக்கே ஒண்ணரை மணி ஆவுது. இப்ப மணி எட்டே கால்."

"நாளைக்கு டியூட்டி இருக்கா வடிவேலு?"

"நைட் ஷிப்ட் சார். ராத்திரி எட்டு மணிக்கு இருக்கணும்."

"நீ என்ன மெகானிக்கா?"

"ஆமாம் சார்."

"இவ்வளவு தூரம் போறதுக்குப் பதிலா நீயே சொந்தமாத் தொழில் நடத்தலாம், இல்லியா?"

"நடத்தலாம் சார். ஆனா அதுக்கு வசதி வேணுமே?"

"சரி சரி. நான் உனக்குக் குறுக்கே நின்னு என்னென்னமோ பேசிட்டுப் போறேன்" என்ற ரமணி, "உன்னாலே எனக்கு ஒரு உதவி தேவைப்படறது, வடிவேலு. நீ மனசு வைச்சா ஒரு உயிரைக் காப்பாத்தலாம்" என்றான்.

திடீரென உஷாராகி விட்டவனைப் போல சிலிர்த்த வடிவேலு மௌனமாய் அவனைப் பார்த்தான். பிறகு நிதானமாக, "ஒரு பொம்பளை உசிரா?" என்றான்.

"ஊஹூம், ஆம்பளை உசிரு. உனக்கு ஆட்சேபணை இல்லேன்னா நாம ரெண்டு பேரும் நாளைக்குக் காலையிலே மறுபடியும் சந்திக்கலாம். நம்ப சந்திப்பினாலே ஒரு வேளை உன் வாழ்க்கையின் திசையே மாறிடலாம்னு எனக்குப் படறது."

"நீங்க எதுக்காக இவ்வளவு தூரம் வந்திருக்கீங்கன்னு எனக்கு ஒரு மாதிரியாப் புரியுது சார்... ஆனா நின்னு விசாரிக்க இப்ப நேரம் இல்லே."

"அப்ப நாளைக்கு?"

"நான் ரெடி சார்."

"எங்கே?"

"நீங்க சொல்லுங்க."

"இதோ என் அட்ரெஸ். அங்கே வந்தா நாம நிம்மதியாப் பேசலாம். உனக்கு ஆட்சேபணை இல்லேன்னா எங்க வீட்லேயே சாப்பிடலாம்."

ரமணியின் முகவரியைப் பார்த்ததும், "உங்க வீட்டுக்குப் பக்கத்திலேதானே பீமண்ண முதலித் தெரு இருக்கு."

"ஆமாம். நீ வந்திருக்கியா?"

"பீமண்ண முதலித் தெருவிலே என் சிநேகிதன் இருக்கான். அவனும் நானும் ஒரே பாக்டரியிலதான் வேலை செய்யறோம்."

"பேரு?"

"கபாலி...."

"கொஞ்சம் இரு... கபாலி... கபாலி. ஒசரமா ஒடிசலா டோபா வைச்ச தலை. மாதிரி..."

"அவனேதான்."

"அவனுடைய அப்பா பெயர் நல்ல தம்பி."

"கரெக்ட் சார்."

"நல்லதம்பியின் அப்பா ஒரு காலத்தில எங்க வீட்ல தோட்ட வேலை செய்திட்டிருந்தார். இப்ப அவருக்கு வயசு தொண்ணூறு இருக்கும்."

"தெரியாது சார்," என்ற அவன், வாசலில் நிறுத்தப்பட்டிருந்த டி.வி.எஸ். மோபட் அருகே சென்றான்.

"அப்ப நாளைக்குப் பத்து மணி."

"ஓ.கே. சார்."

"ரொம்ப தாங்க்ஸ் வடிவேலு. சிரமத்துக்கு என்னை மன்னிச்சுடு" என்றான் ரமணி.

ரமணி கைக் கடிகாரத்தைப் பார்த்தான். எட்டரைக்கு இன்னும் ஐந்து நிமிடங்கள் இருந்தன. பத்து மணிக்குத்தான் ஆபீஸ். ஒன்றரை மணி நேரத்தை எப்படிக் கழிப்பது?

திடீரென்று ஒரு யோசனை உதித்தது.

# இலவசமாக ஃபெம் வழங்குகிறது

**ஒவ்வொரு 90 கிராம் பேக்குடன்**
**2 ஒப்பற்ற பை கிளிப்புகள் இலவசம்.**











*முந்துங்கள்!* சலுகை ஸ்டாக் உள்ளவரையே

Dazzal-Tam

# மூச்சுக்கு புதுமணம் ப்ராமிஸ், பல்லுக்கு ஆரோக்கியம் ப்ராமிஸ்.



**இதுதான் ப்ராமிஸ்**
**டூத்பேஸ்ட்டின் பெருமையே.**

ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டில் இரு செயல் புரியும் கிராம்பு எண்ணெய் அடங்கியுள்ளது. இது பல் இடுக்குகளில் புகுந்து பற்களின் வேர்களை மேலும் கிருமிகளை அகற்றுகிறது. தவிர சுவாசத்தில் துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை ஒழித்து மூச்சுக்குப் புதுமணமூட்டுகிறது. கிராம்பு எண்ணெய் அடங்கிய டூத்பேஸ்ட் ப்ராமிஸ்






பல்சாரா—
டூத்பேஸ்ட்
நிபுணர்கள்.

**Promise**



CHAITRA-B BLS 951 TAM



**கௌதம் —**
**இன்றைய இளைஞர்களுக்கு**
**ஒரு முன்னுதாரணம்!**

• 'மணல்வெளி மான்கள்' சற்றும் மிகையற்று, கதைகளுக்கு அளிக்கப்படும் அடிப்படைக் கற்பனைச் சுதந்திரத்தைக் கூடப் பயன்படுத்தாமல், முற்றிலும் யதார்த்தமாகவே வெளிப்பட்டிருந்தது. இது நடைமுறை எழுத்தாளருக்கும் புதுமையானது. வையவனுக்கு வாழ்த்துக்கள்!

திருச்சி. மேகதூதன்.

• இவ்வளவு மென்மையான — ஆழமான — நிதர்சனமான ஒரு காதல் கதையை இதுவரை நான் படித்ததில்லை.

திருச்சி — 4. தாயு. ஆண்டாள்.

• ஒரு லட்சிய இளைஞனின் யதார்த்தமான கதை! இறுதிவரை உறுதி கொண்ட நெஞ்சினனான கௌதம் — இன்றைய இளைஞர்களுக்கு ஒரு முன்னுதாரணம்!

பழநி — 15. கெ. நாகராஜன்.

• நாயகன் கௌதம் முதல், வண்டிக்கார செங்காரம் வரை, அனைவரது உள்ளத்து உணர்வுகளையும் எழுத்தில் வெளிக்கொணர்ந்த வையவனுக்கு எங்களின் மனமார்ந்த பாராட்டுக்கள்.

திருச்சி — 14. ஜெகரத்னா.

• விறுவிறுப்பான கதை ஓட்டத்திற்குக் கரோவின் ஓவியங்களும் போட்டி போட்டுக் கொண்டு ஒத்துழைப்புத் தந்தது பாராட்டத்தக்கது.

நெல்லிக்குப்பம். தமிழ்ப்பரிதி.

• 'மணல்வெளி மான்கள்' நாவல் பல விதங்களில் தனித் தன்மை வாய்ந்தது. கதை முழுவதும் கௌதம் என்ற உத்தம மனிதனைச் சுற்றியே பின்னப்பட்டிருக்கிறது. அவனது இலட்சிய நோக்கையும் உயர்ந்த பண்பையும் வெளிப்படுத்தும் ஒரே நோக்குடன்தான் இதர கதாபாத்திரங்களைப் படைத்துள்ளார் கதாசிரியர் வையவன். ஆதியை பெயிலில் வெளிக்கொணர்வதற்காகத் தனது கைக்கடிகாரத்தை விற்பது தொடங்கி, அம்மாவின் சம்மதத்துடனேயே வீட்டை விட்டு ஓடி வந்துள்ள நித்யாவைத் திருப்பி அனுப்புவது வரை — கௌதமின் ஒவ்வொரு செயலும் அவனை ஒரு கம்பீரமான கதாபாத்திரமாக உயர்த்திக் காட்டுகின்றன. — அதே நேரத்தில் கௌதமை ஒரு சூப்பர்மேன் ஆக்காமல் அவனது மனப் போராட்டங்களையும் இயல்பாக விவரித்து, அவனை ஒரு யதார்த்தமான கதாபாத்திரமாகவும் மிளிரச் செய்துள்ளார் கதாசிரியர். அவருக்கு மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை — 101. எஸ். ஆராவமுதன்.

கொஞ்ச தூரம் நடந்த பிறகு ஒரு பஸ் நிலையத்தில் நின்றான். சென்ட்ரலில் இறங்கி, மீண்டும் வேறொரு பஸ்ஸில் ஏறிப் பூக்கடையில் இறங்கிய போது மணி எட்டு ஐம்பது.

தனத்தின் வீட்டை அடைந்த போது மணி ஒன்பது அடித்து ஐந்து நிமிடம்.

சற்றும் அவனை எதிர்பாராத தனம், ''வாங்க சார்!'' என்று வரவேற்றாள். பிறகு, ''அவரு எப்படி இருக்காரு?'' என்று கேட்டாள்.

''வேளா வேளைக்கு சாப்பிட்டுத் தூங்கறான். முழிச்சுட்டிருக்கறப்பவெல்லாம் உன் நினைவா, உன் பேச்சா இருக்கிறான்.''

''அம்மாவும் ஐயாவும் வெளியூர் போறதாகச் சொன்னாங்களே?''

''போயிட்டு வந்தாச்சு. நானும் ரங்கனும் கூட வெளியூர் போயிருந்தோம்.''

''லாட்டரிப் பணம் விசயமாகவா!''

''இல்லே, தனம். வேலூர் பக்கத்தில நிலம் மலிவா விலைக்கு வர்றதுன்னு சொன்னாங்க. அதைப் பார்த்துட்டு வரலாம்னு போனோம். உன் பேர்லதான் வாங்கணும்னு ரங்கன் பிடிவாதமா இருக்கான்.''

''அவரு மனசு மாறிப்பூட்டுதா? இங்கேர்ந்து போனப்ப நான் இனிமே வேண்டவே வேண்டாம்னு கருவிட்டுப் போனாரே?''

''ரங்கன் மனசை நீ சரியாப் புரிஞ்சுக்கலே தனம். ஏன், என் மனசையும் புரிஞ்சுக்காம வாயில வந்தபடி ஏசினே!''

''தப்புத்தான் ஐயா! மன்னிச்சுக்குங்க!''

''நான் நல்லவனுக்கு நல்லவன். உன் அப்பன் மாதிரி பொல்லாதவன் வந்தாலும் அவனைச் சமாளிக்கவும் என்னாலே முடியும்... சரி சரி, இதையெல்லாம் இப்பப் பேசுவானேன்... நான் இப்ப வந்த விஷயத்தைச் சொல்லிடறேன்.''

''சொல்லுங்கய்யா!''

''நாளை மறுநாள் திங்கட் கிழமை, ரங்கன் கோவில்ல அபிஷேகத்துக்கு ஏற்பாடு செய்திருக்கான். நான் அம்மா, அப்பா எல்லாரும் போறோம். நீயும் வரணும்னு ரங்கன் என்னைப் போட்டு அரிச்செடுக்கறான். லாட்டரியில பணம் வந்ததிலே அவனுக்குத் தலைகால் தெரியலே... நிறையக் கோவில்களிலே அபிஷேகம் அர்ச்சனை இதெல்லாம் நடத்தணுமாம்.''

''வரேன் ஐயா... எந்தக் கோவில்னு சொல்லுங்க. நானே வந்து சேர்ந்துக்கறேன்.''

''ரொம்ப தூரத்தில இருக்கு, தனம். உன்னாலே பஸ் பிடிச்சு வர முடியாது. நான் கார் அனுப்பறேன்.''

''எந்தக் கோவில் ஐயா?''

''திருநீர்மலை!'' என்றான்.

தனம் தாக்கப்பட்டவளைப் போலச் சுவரில் சாய்ந்தாள்.

(தொடரும்)

# முதுமையிலும் இளமை!

சர்வாங்காசனத்தை எல்லோரும் செய்யலாம் என்றாலும், வயதானவர்களா லும் பலஹீனமானவர்களாலும் அதிகக் கனமான தேகத்தை உடையவர்களாலும் உடலை மேலே தூக்கவும் கரங்களால் தாங்க வும் முடியாது. முன் அத்தியாயத்தில் சொன்னபடி செய்ய வேண்டுமானால், அது சாதாரணமாய்ச் சற்று ஆரோக்கியமுள்ள பலசாலிகளால்தான் செய்ய முடியும். மற்ற வர்களுக்கு ஓரிரு யோசனைகள்:

சுவரின் ஓரமாய்ப் படுத்து, பிருஷ்டத் தைச் சுவரில் ஒட்டவைத்து, கால்களைத் தூக்கிச் சுவரின் மேல் போட்டு, நேராய் வைத்துக் கொள்ளவும். கைகளை மடக்கி, முழங்கைகளை ஊன்றி, சற்று மூச்சைப் பிடித்து, 'இரண்டு குதிகால்களை மட்டும் சுவரில் நன்றாக ஊன்றி, பிருஷ்டத்தையும் இடுப்பையும் முதுகையும் தூக்கி, கைகளை இடுப்படியில் கொடுத்துத் தாங்கிப் பிடித்துக் கொள்ளவும். மூச்சை சௌகரியம் போல் இழுக்கவும் விடவும் செய்யலாம். இப்போது குதிகால்கள் மட்டும் சுவரில் ஒட்டிக் கொண் டிருக்கும். கைகளை மேலும் நன்றாக ஊன்றி உடலை நன்றாகத் தாங்கிக் கொண்டு, இடது காலை மெதுவாய்ச் சுவரை விட்டுக் கிளப்பி, தலைப் பக்கம் நேராய் நிமிர்த்தின வாறே கொண்டு வரவும். பிறகு இன்னமும் சற்றுக் கைகளை ஊன்றிக் கொண்டு, வலது காலையும் மெதுவாய்ச் சுவரிலிருந்து அகற்றித் தலைக்குப் பின்புறம் வளைக் காமல் கொண்டு சென்று, மற்ற காலுடன் சேர்த்து ஒட்ட வைத்துக் கொள்ளவும்.

ஆரம்பத்தில் கால்கள் நிலைக்கு அதிக மாகப் பின்புறம் கொண்டு சென்றால்தான் நிற்க முடியும். முதுகை நேராய் நிமிர்த்த முடியாதிருக்கும். பழகப் பழக முதுகு நேராய் நிமிர்ந்து, கால்கள் தலைக்கு நேராக வரும். முழங்கையை அகற்றி வைக்கக் கூடாது. உடலைச் சேர்த்தாற் போல் வைத்து ஊன்றி னால்தான் உடலைத் தாங்க முடியும்.

சிலருக்கு ஒரு கால் மட்டும் தலைப்பக்கம் கொண்டு செல்ல வரும். இரண்டாவது காலைக் கொண்டு செல்லும் போது, கை, உடலைச் சரியாகத் தாங்கிக் கொள்ள வில்லையானால் பக்கத்திலாவது சுவரின் பக்கமாவது சரிந்து விழ நேரிடும். ஆகை யால் கைகளை நெருக்கி வைத்து நன்றாய் உடலைத் தாங்கிக் கொண்ட பின்புதான் இரண்டாவது காலைத் தூக்க வேண்டும். 'சர்வாங்காசனத்தைச் செய்தே தீருவது, விடுவதில்லை' என்று பிடிவாதத்துடன் செய்தால், சிறு பிழைகளை வென்று விட லாம். சரிதமான நிலை சில நாட்களில் நிச்சயம்.

சுவர் உதவியில்லாமல் ஆள் உதவியு டனும் செய்யலாம். மல்லாந்து படுத்துக்



கொண்டு இரு கால்களையும் சேர்ந்தாற்போல் தூக்க வேண்டும். உதவுகிறவர், கால்களைப் பிடித்துக் கொள்ள, பிருஷ்டம், இடுப்பு, முதுகு இவற்றைத் தரையிலிருந்து தூக்கி, சர்வாங்காசன நிலைக்கு வந்ததும் அப்படியே இடுப்படியில் கைகளைக் கொடுத்துத் தாங்கிக் கொள்ள வேண்டும். உதவுகிறவர் தொடர்ந்து கால்களைப் பிடித்துக் கொண்டு உதவலாம். எவ்வளவுக்கெவ்வளவு கைகளை இடுப்பை விட்டு இறக்கி, முதுகுப் பக்கம் பிடிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு முதுகு நிமிர்ந்து நேராய் நிற்கும். சில நாள் இப்படி ஆள் உதவியுடன் பழகினால் உடல் பிடிப்பு விட்டு, நல்ல சக்தி ஏற்படும். பிறகு, ஆள் உதவியின்றி தானாகவே செய்து கொள்ளலாம்.

குழந்தைகள் சர்வாங்காசனம் செய்யப் பெரியவர்கள் உதவலாம். நாமே உட்கார்ந்து, நமது இடது கால் மடித்துக் குழந்தையின் முதுகுக்கு முட்டுக் கொடுத்து, வலது காலை அகல நீட்டித் தலைக்கு முட்டுக் கொடுத்து, குழந்தையின் கால்களை நமது கைகளால் சர்வாங்காசன நிலைக்கு வர உதவி, தாங்கிப் பிடித்துக் கொள்ள வேண்டும். ஆரம்பத்திலேயே முதுகு சரியாக, நேராக நிமிர்ந்து இருக்க வேண்டும் என்பதில்லை. நாளாவட்டத்தில் நிமிர்த்திக் கொள்ளலாம்.

சர்வாங்காசனம் செய்பவர்கள் கண்டிப்பாக நினைவில் வைத்திருக்க வேண்டிய விஷயம், வாய் மூடியிருக்க வேண்டும் என்பது. மூக்கின் வழியாகத்தான் மூச்சு வாங்கவும் விடவும் வேண்டும். பேசக் கூடாது. பேசியே ஆக வேண்டிய நிலை ஏற்பட்டால் ஓரிரு வார்த்தைகளுக்கு மேல் பேசக் கூடாது. அநேகமாய் உமிழ்நீர் ஊறாது. அப்படி ஊறினாலும் சர்வாங்காசனம் செய்யும் போது விழுங்கக் கூடாது. வாயில் அடக்கி வைத்திருந்து, ஆசனம் கலைத்த பின், துப்பவோ விழுங்கவோ செய்யலாம். தும்மல் அல்லது இருமல் வரும் போலிருந்தால் இறங்கி விட வேண்டும். சர்வாங்காசனத்தில் இருந்தபடியே தும்மவோ இருமவோ கூடாது. ஜுரம், தலைவலி போன்றவை இருக்குமானால் ஆசனம் செய்ய வேண்டாம்.

இலகுவாகப் பழகுவதற்குச் சில உபாயங்கள் கூறப்பட்டிருப்பதால் அவற்றையே எப்போதும் பிடித்துக் கொண்டு அப்படியே செய்து கொண்டிருக்கக் கூடாது. எந்தவித உதவியுமின்றி நாமாகவே செய்து சரியான நிலைக்கு வர சதா முயற்சி இருந்து கொண்டேயிருக்க வேண்டும்.

கர்ப்ப ஸ்திரீகள் சர்வாங்காசனம் மட்டுமின்றி, எந்த ஆசனமுமே புதிதாகச் செய்யக் கூடாது. ஏற்கெனவே செய்து வரும்




பகவானுக்கும் பக்தனுக்கும்
பாலமாய் அமைந்தது.

பூஜைக்கு உகந்தது ஆயுர்வேத
வனமூலிகா தூபம் என்று
சாஸ்த்திரங்கள் சொல்லுகின்றன.
இதிலே தயாரானதுதான்

அம்பிகா ஹெவன் அகர் பத்தி
அம்பிகா தர்பார் பத்தி

42 வருடங்களாய்
புகழ் பெற்றது.



JAC

For Distributorship

அம்பிகா காம்ப்ளக்ஸ்,

32, ஆற்காட் ரோடு, சென்னை - 24. PHONE 427605 422097

சகோதரிகள், கர்ப்பம் கொண்டால், இரண்டு மாதம் வரை பத்து நிமிஷங்களுக்கு மேற்படாமல் செய்யலாம். அதன்பின் கூடாது.

சர்வாங்காசனத்தினால் என்ன பலன்? எப்படி உண்டாகிறது? தலை, புஜம் மட்டும் கீழே தரையில் இருக்க, மற்ற பாகங்களெல்லாம் மேல் தூக்கப்பட்டிருக்கின்றன. பூமியில், தலை, புஜம், முக்கியமாகக் கழுத்து பதிந்திருக்கிறது. கழுத்தில் தைராய்ட் கோளம் இருப்பதாக முன்பே கூறியிருக்கிறேன். சர்வாங்காசன நிலையில் பூமியின் ஆகர்ஷண சக்தியானது கழுத்துக்கு அதிக ரத்தத்தை வரவழைக்கிறது. தைராய்டுக்கு ரத்த போஷணை அதிகமாகக் கிடைக்கிறது. தைராய்ட் பலமடைகிறது. அதனால் அது செவ்வனே பணியாற்றி, தைராய்ட் ஹார்மோனை உற்பத்தி செய்கிறது. ஹார்மோன், ரத்தத்தில் கலந்து நல்ல பலன்களை அளிக்கிறது. உடல் வளர்ச்சியை நிர்வகிக்கிறது. மற்ற ஹார்மோன்களின் உற்பத்தியையும் ஊக்குவிக்கிறது. இப்படி சங்கிலித் தொடராக நன்மைகள் பெருகுகின்றன.

இருதயம் நன்கு இயங்க, தைராய்ட் ஹார்மோன் அவசியம். ஆக, சர்வாங்காசனத்தில் இருதயமும் ரத்த ஓட்டமும் தைராய்டுக்கு உதவ, தைராய்ட் ஹார்மோன் இருதயத்துக்கு உதவுகிறது! ஒன்றுக்கு ஒன்று அனுசரணையாக இருந்து, உடலுக்குத் தொண்டாற்றுகின்றன. நடுத்தர வயதிலும் ஏன், முதுமையிலும் கூட இளமையின் சுறுசுறுப்போடு இயங்கலாம். முகத்திலேயே ஆரோக்கியக் களை குடிகொண்டிருக்கும்.

சர்வாங்காசனம் செய்து வருவோருக்கு நோய் எதிர்ப்புச் சக்தி பெருகும். நமது முட்டாள்தனத்தினால் நாமாகவே வரவழைத்துக் கொண்டாலன்றி, பல நோய்கள் ஆசனம் பழகி வருவோரைக் கிட்டத்தில் நெருங்கவும் அஞ்சும். அபரிமிதமாக சிகரெட் பிடிப்பது, பெருந்தீனி தின்பது போன்ற பல கெட்ட பழக்கங்களால் நோயை வெற்றிலைப் பாக்கு வைத்து அழைக்கிறோம். இதைத் தவிர்த்து, ஆசனங்களும் பழகி வந்தால் நோய் நம்மை அண்டவே செய்யாது.

ஏற்கெனவே நோய் உள்ளவர்கள் அதைக் குணப்படுத்திக் கொள்ளவும் ஆசனங்கள் பழகலாம். ஆனால் இதற்கு யோகாசன நிபுணர்களிடம் நேரில் சென்று ஆலோசனைகள் பெற வேண்டும்.

மற்றபடி சராசரி நபர்கள், பழக்க வழக்கங்களில் கட்டுப்பாடுகளை அனுசரித்து, ஆசனமும் பழகி வந்தால் என்றும் இளமையாகவும் ஆரோக்கியமாகவும் வாழலாம்.

(தொடரும்)




அம்மன்
தரிசனம்

புதிய

ஆன்மிக கலாசார
மாத இதழ்

செப்டெம்பர் முதல் வெளிவருகிறது

சிருங்கேரி ஆச்சாரியாளின் அருளுரை

ஒவ்வொரு இதழ்தோறும்
ஏ.என். சிவராமன் எழுதும்
வேத மந்திரங்கள் கட்டுரைத் தொடர்.

பாலகுமாரன் எழுதும்
பெரிய புராணக் கதைத் தொடர்

மற்றும்

ஆன்மிக, விஞ்ஞான, கலை,
இலக்கியக் கட்டுரைகளுடன்
வெளிவர இருக்கிறது.

ஒவ்வொரு இதழும் படித்துப்
பாதுகாக்க வேண்டிய பொக்கிஷம்

எல்லா ஊர்களுக்கும்
ஏஜெண்டுகள் தேவை

அம்மன் தரிசனம்,
11-ஏ, ஏ.ஆர்.கே. காலனி
எல்டாம்ஸ் சாலை,
சென்னை-600 018.
போன்: 455899




தொழில்துறையில் 50 ஆண்டுக்கால அனுபவம்
தெய்வபக்தி, தேசபக்தி மற்றும் இந்தியப்
பாரம்பரியத்தில் நம்பிக்கை கொண்டவர்களின்
ஆதரவுடன் வெளிவரும் பக்திப் பத்திரிகை.

# துப்பாக்கிக் கலாசாரம் தோன்றக் காரணம் என்ன?



• எதிர்பார்க்க முடியாது!



• ஜே போடுவதா?



• அதிர்ஷ்டம் அடிக்குமா?



• கடைசிவரை காப்பாரா?



• முரசொலிப்பாரா?



• ஒளிப்பதிவில் வேட்டடஸ்ட்!



• இதுதான்டா கிரிக்கெட்!



• இதுதான்டா விக்கல்!

• ம. சண்முகசுந்தரம், பா. மேட்டூர்.

? 'அரசியலில் நல்ல ஒழுக்கத்தை எதிர்பார்க்க முடியாது' என்று தேவிலால் கூறியிருக்கிறாரே?

! அவரிடமிருந்து அதை எதிர்பார்க்க முடியாது என்பது உறுதிப்பட்ட பிறகு, பிறரைப் பற்றிப் பேச அவர் அருகதையற்றவராகிறார்.

• வெற்றியூர் வெங்கட், நாட்டரசன் கோட்டை.

? 'மறுவாழ்வு தருகிறோம்; அகதிகளைத் திருப்பி அனுப்புங்கள்' என்று விஜயரத்ன, கருணாநிதிக்கு வேண்டுகோள் விடுத்துள்ளாரே?

! 'இலங்கையில் எங்களுக்குப் பாதுகாப்பு இல்லை, திருப்பி அனுப்பி விடாதீர்கள்' என்று அகதிகள் ஆளுனர் பர்னாலாவிடம் வேண்டுகோள் விடுத்துள்ளனரே!

• கணியூர் பழனிச்சாமி, கோவை.

? 'பிள்ளையைக் கிள்ளி விட்டுத் தொட்டிலையும் ஆட்டுவது' என்பதற்குச் சமமாக அரசின் எந்த நடவடிக்கையைக் கருதுவீர்கள்?

! மலிவு விலை மதுக்கடையைத் திறந்து விட்டு, மதுவினால் ஏற்படும் தீமைகளை விளக்கிப் பிரசாரம் செய்யக் குழு அமைப்பதைத்தான்.

• க. கோபி, ஆவடி.

? ஜெயலலிதாவுக்கு நீங்கள் 'ஜே' போடுவது போல் தெரிகிறதே?

! ஆங்கிலத்தில் அவர் பெயரை எழுதும் போது நான் மட்டுமென்ன, கலைஞர் கூட ஜெயலலிதாவுக்கு J போடத்தான் வேண்டும். மற்றபடி ஆதரவோ, எதிர்ப்போ அவரது நடவடிக்கைகளைப் பொறுத்தது.

• கோரி கருணாநிதி, திருவண்ணாமலை.

? திருநாவுக்கரசு கூறுவதை மட்டும் போட்டுவிட்டு ஜெயலலிதாவைப் பேட்டி காணாமல் விட்டது ஏன்? உள்நோக்கம் உண்டா?

! பல்வேறு சந்தர்ப்பங்களில் அவரைப் பேட்டி காண முயன்று அடைந்த ஏமாற்றங்களைத் தவிர வேறு காரணம் ஏதும் இல்லை. இந்தக் குறையை ஓரளவேனும் ஈடுகட்டத்தான் அரங்கநாயகம் பேட்டி.

• லா. ரா. சப்தரிஷி, ஹோசூர்.

? மலிவு விலை சாராய பாக்கெட் மீது அரசு முத்திரை இருந்தால் ஸ்ரீவில்லிபுத்தூர் கோவிலும் இருக்குமே? சரிப்படாதே? முதல்வர் ஆசைப்படி அரசு முத்திரை

**வள்ளுவர் கோட்டம் என்று மாற்றினால் கள்ளுண்ணாமை இடிக்குமே?**

! ஒரு பக்கம் சாராய போதை—மற்றொரு பக்கம் அதனால் அரசுக்குக் கிடைக்கும் வருமான போதை. இவற்றை மீறி, இருப்பதும் இடிப்பதுமா கண்ணில் படப் போகிறது!

* **எஸ். யோகலிங்கம், சென்னை — 82.**

? **முதல்வராகும் அதிர்ஷ்டம் சிவாஜிக்கு அடிக்குமா?**

! அவர் அதிர்ஷ்டமெல்லாம் சினிமாவோடு சரி.

* **சைதை வி. முரளி, சென்னை — 44.**

? **சமீபத்தில் ஏற்பட்ட இன்ப அதிர்ச்சி?**

! தமிழ்த் திரையுலகில் ஏற்பட்டு வரும் ஓர் ஆரோக்கியமான மாறுதல். புது வசந்தம், அஞ்சலி, கேளடி கண்மணி..... இன்ப அதிர்ச்சிகள் தொடரட்டும். இது வே சகஜமாகட்டும்.

* **அ. க. குமாரன், சென்னை — 21.**

? **'எட்டி உதைத்த கால்களை முத்தமிட மாட்டேன்' என்று பேட்டி அளித்திருக்கிறார் திருநாவுக்கரசு. கடைசி வரை இந்த வார்த்தையைக் காப்பாற்றுவாரா?**

! கடந்த கால அனுபவங்களை வைத்துப் பார்த்தால் பாஸிடிவ் பதில் கிடைக்கவில்லைதான். ஆனால் இந்தத் தடவை விரிசலின் அகலம் அதிகமாகி விட்டதாகவே தோன்றுகிறது.

* **திருமலை கோவிந்தன், மதுரை.**

? **நல்ல ஆளும் கட்சி அமையாத போது நல்ல எதிர்க்கட்சி அவசியம்தானே?**

! இங்கேஇரண்டும்இல்லைஎன்பதுதானே நம் வேதனை!

* **சூர்யப்பிரகாஷ், கிழக்குத் தாம்பரம்.** *

? **இந்திய அமைதிப் படையைக் கௌரவித்து, இந்திய அரசு, இரண்டு ரூபாய் மதிப்புள்ள தபால் தலை வெளியிட்டுள்ளது. இப்படையைக் 'கொலைகாரப் படை' என்று கூவிய கலைஞர் தம்முடைய கழகக் கண்மணிகளான மறத் தமிழர்களிடம் 'இத்தபால் தலையை உபயோகிக்க வேண்டாம்' என்று முரசொலிப்பாரா?**

! ஏற்கெனவே அமைதிப் படையை — இந்தியராணுவத்தைஅவமதித்துவிட்டதாகச் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டிலிருந்து மீள முடியாமல் திணறிக் கொண்டிருக்கும் அவர், புதிய சிக்கல்களை உருவாக்கிக் கொள்ள மாட்டார் என்று நம்புவோம்.

* **உமார்த்தி, கோவை.**

? **இளம் தலைமுறை ஒளிப்பதிவாளர்களில் தங்களைக் கவர்ந்தவர்?**

! பாலு மகேந்திரா, அசோக்குமார், ஸ்ரீராம் வரிசையில் தற்போது சேர்ந்திருக்கிறார் மது அம்பட்.

* **ஜோ. ஆ. சுந்தர்ராஜன், மாதாக் கோட்டை.**

? **கத்தியின்றி, ரத்தமின்றி, அஹிம்சை என்ற ஆயுதத்தால் சுதந்திரம் பெற்ற நம் நாட்டில், இன்று துப்பாக்கி ஏந்திடும் கலாசாரம் தோன்றுவதற்குக் காரணம் என்ன?**

! அன்பும் நேர்மையும் நல்லொழுக்கமும் திறமையும் அரசாண்ட இடத்தில், துவேஷமும், சுயநலமும், சூது வாதும், மந்த புத்தியும் அமர்ந்து விட்டதுதான் காரணம். அன்று ஆட்சியில் ராஜதந்திரம் இருந்தது. இன்று வெறும் தந்திரம்தான் இருக்கிறது.

* **ஈ. ஆர். சங்கரன், ஈரோடு.**

? **'தமிழகத்தில் புலிகளின் நடமாட்டமே இல்லை' எனக் கூறிய தமிழக அரசு, தற்சமயம் சில புலிகளைக் கைது செய்திருப்பது பற்றி...?**

! 'அப்பன் குதிருக்குள் இல்லை' என்ற வழக்கு மொழிக்கு எடுத்துக்காட்டு.

* **கிஷோர், திருச்சி — 21.**

? **'இதுதாண்டா கிரிக்கெட்!' என்று முச்சதம் அடித்து விட்டாரே, கூச்!**

! 'இதுதாண்டா ஸிக்ஸர்' என்று தொடர்ந்து நாலு ஸிக்ஸர்களை அடித்துச் சாதனை படைத்து விட்டாரே, கபில்! தோற்றுப் போனதை எண்ணிக் குமையாமலிருக்க இதுவும், அஸாரின் அபார ஆட்டமும், ரவி சாஸ்திரியின் சதமும் உதவியிருக்கிறதே!

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**சூர்யப்பிரகாஷ்,**
**5—ஏ, சுந்தரேஸ்வரர் கோவில் தெரு,**
**தாம்பரம் கிழக்கு,**
**சென்னை — 600 059.**



புல் தரையில் விளையாடுவதற்குச் சிறப்பான பயிற்சியும் பெற்றிருந்ததால் வெற்றி பெறுவேன் என்பதில் உறுதியாக இருந்தேன். அதே போல் வெற்றியும் பெற்றேன். என்னுடைய பயிற்சியாளர் ஓமேரா ஓடி வந்து என்னைக் கட்டிப் பிடித்து வாழ்த்தினார். பிறகுதான் என்னோடு வந்திருந்த என் தாயும் விஜய் அமிர்தராஜும் வாழ்த்தினார்கள். அப்புறம் தந்தையுடன் ஃபோனில் பேசினேன்.

லியாண்டர் பயஸ். உலக டென்னிஸ் அரங்கில், விம்பிள்டன் ஜூனியர் பிரிவில், முதல் இடத்தைப் பெற்றுள்ளவர். அவரைச் சந்தித்த போது...

# கால்பந்து விளையாடிய டென்னிஸ் சாம்பியன்!

"விளையாட்டுத் துறையில் உங்களுக்கு எப்படி ஆர்வம் ஏற்பட்டது?"

"என் தந்தை சிறந்த ஹாக்கி ஆட்டக்காரர். முனிச் ஒலிம்பிக்ஸில் பங்கேற்றவர். அம்மா ஜெனிஃபர், கூடைப் பந்தாட்டத்தில் அகில இந்திய அணியில் பங்கேற்றவர். எனவே எனக்கு விளையாட்டுக்களில் ஈடுபாடு ஏற்பட்டதில் வியப்பில்லை."

"குறிப்பாக டென்னிஸ் விளையாட ஆரம்பித்ததற்குக் காரணம் ஏதும் உண்டா?"

"நான் ஆரம்பத்தில் விருப்பத்தோடு விளையாடியது கால்பந்தாட்டம்தான்! பிறகுதான் டென்னிஸ் விளையாட ஆரம்பித்தேன். டேவிஸ் கப் போட்டியில் எனது விளையாட்டைக் கவனித்த ஆனந்த் அமிர்தராஜ் என்னை பிரிட்டானியா டென்னிஸ் பவுண்டேஷனில் சேர்த்தார்! சென்னை கிறித்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டே காலை, மாலை இரண்டு வேளையும் டென்னிஸ் பயிற்சி பெற்று வந்தேன்..."

"விம்பிள்டன் சென்ற போது உங்களுக்கு வெற்றி பெறுவோம் என்ற நம்பிக்கை இருந்ததா?"

"நிச்சயமாக. ஏனெனில் எனக்கு எப்போதுமே தன்னம்பிக்கை அதிகம். அதோடு,

"உங்களது விளையாட்டில் சிறப்பானதென்று நீங்கள் கருதுவது எது?"

"ஃபோர் ஹாண்ட், வாலீஸ். இவற்றைவிட முக்கியமானது, எதிராளியை வெற்றி கொள்ள வேண்டும் என்கிற எனது உறுதியான எண்ணமும் அதற்கான தீவிர முயற்சியும்."

"ஜூனியர் விம்பிள்டன் சாம்பியனான நீங்கள் பெக்கர், எட்பர்க் போன்றோருடன் விளையாட நேர்ந்தால் உங்கள் மனோநிலை எப்படியிருக்கும்?"

"என்னை எதிர்த்து விளையாடுவது யாராக இருந்தாலும் நான் கவலைப்படவே மாட்டேன். யாரோடு விளையாடினாலும் எனது எண்ணமெல்லாம் 'வெற்றி' என்கிற அந்த ஒற்றைச் சொல் மந்திரத்தில்தான் குவிந்திருக்கும். முடிவு முக்கியமல்ல; முயற்சிதான் முக்கியம்."

"உங்களுடைய லட்சியம் என்ன?"

"முதலில் நல்ல மனிதனாக வாழ்வது. அடுத்து, டென்னிஸ் உலகில் முதல் இடத்தைப் பெறுவது."

சந்திப்பு: அசோக்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.



# என் பாட்டி ஒரே ஒரு முறைதான் பொய் சொன்னாள்...

தினமும் நான் சாப்பாட்டை முடிக்க பாட்டி எனக்கு ஸ்பூன் நிறைய ஊறுகாய் வைப்பது வழக்கம். ஆகா, காரமும் மணமும் நிறைந்த, அருமையான, வீட்டிலேயே தயாரான ஊறுகாய்... ஆனால் நான் ருசித்துச் சாப்பிட்டது உண்மையில் ருசி ஊறுகாய்தான் என்பதை, பாட்டி என்னிடம் சொல்லாமலே மறைத்து விட்டாள். இப்போதுதான் எனக்கு அந்த உண்மை தெரியும். ஆனால் ஒன்று மட்டும் சொல்வேன். ருசி ஊறுகாய்க்கும் வீட்டிலேயே தயாரிக்கப்படும் ஊறுகாய்க்கும் வித்தியாசமே கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில் பாட்டியின் தயாரிப்பான வீட்டு ஊறுகாய் போலவே ருசி ஊறுகாய் விறுவிறுப்பானது. நல்ல மணத்துடன் கூடியது. மேலும் மேலும் சுவைக்கத் தூண்டுவது. இது முழுக்க முழுக்க உண்மைதான்!

சுவை மிக்க
19 வகைகளில்
கிடைக்கிறது.




ருசி ஃபுட் பிராடக்ஸ்,
"ஷ்யாம் ஹவுஸ்",
125, ஜி.என். செட்டி ரோடு சென்னை 600 017

போன்: 869290/869438

SHYAM GROUP
ENTREPRENEURS WITH VISION




LINTAS M RFP 3 2013 TM

வீட்டிலே தயாரித்தது போன்ற சுவை.
செய்யும் சிரமம் சிறிதும் இல்லை

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka




## ஜண்டு பாம்
## ஜலதோஷம், தலைவலி மற்றும் நோவுகளை நொடியில் நீக்குகிறது.

வேலைகளுக்கு இடைஞ்சலும் ஏற்படாது. தலைவலியில் இருந்து துரிதமான விடுதலையும் கிடைக்கும். எனவேதான் ஜண்டு பாம், தலைவலி நீங்கலாக, ஜலதோஷம், முதுகுவலி, இடுப்பு வலி, உடல்வலி மற்றும் சுளுக்கு வலிகளிலிருந்தும் குணம் அளிக்கிறது.

மற்ற பாம்களோடு ஒப்பிடும்போது ஜண்டுபாம் கூடுதல் வீரியம் கொண்டது. நிறமற்றது. எனவே கறை படியுமோ என்ற பயமில்லை. பிசுபிசுப்பற்றது. அதனால் வீட்டிலோ, வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. கொஞ்சமாக உபயோகித்தாலே போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்திற்கும் இதமானது. ஆகவேதான் தாய்மார்கள் தங்கள் குடும்பத்தினருக்கு ஜண்டுபாமையே தடவ விரும்புகிறார்கள்.

சீசாவின் மேல் இருக்கும் சிவப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.

5, 10 மற்றும் 30 கிராம்களில் கிடைக்கிறது.




**ஜண்டு பாம்** வலிகளை நீக்கும் பாம்

ULKA-1-12531 TAM